சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 14] 1963-ஹு குருபூசை மலர் (15-5-63) [இதழ்

## ஆசிரியர் குழு



## உள்ளுறை

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

உ

செந்திலாண்டவன் துணை

# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
# 275 ஆம் ஆண்டு மகேசுவர பூசைத் திருநாள்

**சோபகிருது ௵ வைகாசி ௴ 27 உ திங்கட் கிழமை**

## 10–6–1963

**ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்**

சிவ சிவ

## ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசைத் திருநாளன்று

வடக்கே இமயமலையில் 12,000 அடி உயரத்திலுள்ள திருக்கேதாரம் முதல் தெற்கே கன்னியாகுமரி வரையிலுள்ள தலங்களில் நடைபெறும் அந்தணர், அருந்தவர், ஏழைகளுக்கு அன்னம் பாலிப்பு

# தருமங்களின் விபரம்

## திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றவை

| தொடர் எண் | தரும எண் | முலதனம் ரூபாய் | அன்னம் பாலிப்பு நடைபெறும் தலங்கள் | அன்னம் பாலிப்பு செலவுத் தொகை ரூ | கண்காணிப்பவர்கள் விலாசம் |
|---|---|---|---|---|---|
| 1 | 224 | 7,000 | திருக்கேதாரம் | 275 | ஸ்ரீ கணேஷ் சங்கர், கேதாரநாத் பண்டா, கேதாரநாத், இமயமலை. |
| 2 | 215 | 7,000 | ரிஷிகேசம் | 205 | ஸ்ரீ சுவாமி சிவாநந்தஜி மகராஜ், சிவானந்த ஆச்ரமம், ரிஷிகேசம். |
| 3 | 200 | 8,000 | ஹரத்துவார் | 275 | போலாநாத் ஆச்ரமம், ஹரத்துவார். |
| 4 | 263 | 5,600 | பிரயாகை | 210 | ஜோஷி மடத்துச் சங்கராச்சாரிய சுவாமிகள் மடம். |
| 5 | 11 | 10,000 | வாரணாசி | 500 | ஸ்ரீ குமாரசாமி மடம், கேதாரக் கட்டம், வாரணாசி. |
| 6 | 279 | 7,000 | திருக்காளத்தி | 205 | திரு. க. சுப்பிரமணிய அய்யர் B. A. தியாகராஜ விலாசம், சென்னை. |
| 7 | 270 | 7,000 | திருத்தணிகை | 205 | ஷை ஷை |
| 8 | 297 | 5.000 | வடதிருவாலங்காடு | 145 | திரு. மு. சபாபதி தேசிகர், வடதிருவாலங்காடு. |
| 9 | 220 | 7,000 | காஞ்சிபுரம் | 205 | திரு. க. சுப்பிரமணிய அய்யர் B. A. தியாகராஜ விலாசம், சென்னை. |
| 10 | 284 | 7,000 | திருக்கழுக்குன்றம் | 205 | ஷை ஷை |
| 11 | 93 | 5.000 | சென்னை | 150 | சென்னபுரி அன்னதான சமாஜம், சென்னை. |
| 12 | 252 | 7,000 | திருவண்ணாமலை | 275 | திரு. தி. சண்முகசுந்தர ஓதுவார், திருவண்ணாமலை. |
| 13 | 325 | 5,000 | திருக்கோவலூர் | 145 | திரு. கே. எம். வேலாயுதம் பிள்ளை, கீழையூர், திருக்கோவலூர். |
| 14 | 207 | 20,000 | சிதம்பரம் | 150 | ஸ்ரீ காசிமடம், சிதம்பரம். |
| 15 | 265 | 5,000 | ஆச்சாள்புரம் | 200 | திரு. S. நாகலிங்கம்செட்டியார், ஆச்சாள்புரம். |
| 16 | 302 | 5,000 | காவிரிப்பூம்பட்டினம் | 145 | திரு. S. சம்பந்தம் பிள்ளை, கீழப்பெரும்பள்ளம். |
| 17 | 262 | 5.000 | சீர்காழி | 145 | திரு. வி. சுவேதாரணியம் அய்யர், அட்வகேட், சீர்காழி. |
| 18 | 250 | 7.000 | வைத்தீசுவரன்கோயில் | 205 | திரு. R. S. ராமையா பிள்ளை, பூங்குடி முதலியார் சத்திரம், வைத்தீசுவரன்கோயில். |
| 19 | 301 | 5,000 | ஆக்கூர் | 145 | திரு: T. R. அகோரமய்யர், ஆக்கூர். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 20 | 330 | 5,000 | திருநள்ளாறு | 145 | திரு. குட்டியப்பபிள்ளை, ஷராப், ஸ்ரீதர்பாரண்யேசுவரர் தேவஸ்தானம், திருநள்ளாறு. |
| 21 | 287 | 10,000 | மாயூரம் | 290 | திரு. G. S. பிள்ளை (கேதாரம் பிள்ளை), பல்லவராயன்பேட்டை. |
| 22 | 139 | 1,00,000 | திருப்பனந்தாள் | 4000 | ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். |
| 23 | 329 | 5,000 | திருவிடைமருதூர் | 145 | Dr. A. சுந்தரம், L. I. M. திருவிடைமருதூர். |
| 24 | 253 | 7,000 | சுவாமிமலை | 205 | திரு. N. R. இராமானுஜம் B. A., கும்பகோணம். |
| 25 | 268 | 6,000 | திருவையாறு | 195 | திரு. அண்ணுசாமி பாகவதர், திருவையாறு. |
| 26 | 264 | 5,000 | திருப்புகலூர் | 200 | திரு. N. M. சோமசுந்தரம் பிள்ளை, திருப்புகலூர். |
| 27 | 238 | 7,000 | திருவாரூர் | 205 | திரு. டி. சோமாஸ்கந்த தேசிகர், திருவாரூர். |
| 28 | 305 | 5,000 | வேதாரண்யம் | 145 | திரு. S. P. வெங்கட்ராமய்யர், பெரி. அழ. மு. அன்னசத்திரம், வேதாரண்யம். |
| 29 | 261 | 7,000 | திருவானைக்கா | 205 | திரு. வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சிராப்பள்ளி. |
| 30 | 318 | 5,000 | விராலிமலை | 145 | ஷ டி ஷ டி |
| 31 | 271 | 10,000 | பழநி | 290 | ஸ்ரீ சாதுசுவாமிகள் மடம் (ஸ்ரீசிவகுமார சுவாமிகள்), பழநி. |
| 32 | 239 | 2,50,000 | மதுரை | 500 | திரு. சிவதர்மபாஸ்கர ம. க. சுந்தரேச பட்டர், மதுரை. |
| | | | கன்னியாகுமரி ஆச்சிரமம் வகையரு தருமங்கள் | | |
| 33 | 327 | 5,000 | திருப்பெருந்துறை | 145 | திரு. எஸ். முருகேசம் பிள்ளை, திருலோக்கி. |
| 34 | 258 | 5,000 | திருக்குற்ருலம் | 195 | திரு A. C சண்முகநயினர் பிள்ளை, B. A., B. L. திருக்குற்ருலம். |
| 35 | 247 | 5,000 | பழையபாபநாசம் | 145 | திரு. D. மரகதசுப்பிரமணிய பிள்ளை, அம்பாசமுத்திரம். |
| 36 | 297 | 5,000 | திருநெல்வேலி | 145 | திரு. சி. ச. அருணுசலம்பிள்ளை, உரிமையாளர், கணபதிமில்ஸ், தாழையூத்து. |
| 37 | 21 | 9,000 | ஸ்ரீவைகுண்டம் | 300 | திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L., ஸ்ரீவைகுண்டம். |
| 38 | 95 | 5,000 | திருச்செந்தூர் | 145 | ஷ டி ஷ டி |
| 39 | 324 | 5,000 | உத்தரகோசமங்கை | 145 | திரு. M. V. ராகவேந்திரராவ் B. A., திவான், இராமநாதபுரம் சமஸ்தானம், இராமநாதபுரம். |
| 40 | 12 | 10,000 | இராமேசுவரம் | 330 | ஸ்ரீ காசிமடம், சன்னிதித்தெரு, இராமேசுவரம். |
| 41 | 201 | 7,000 | கன்னியாகுமரி | 205 | ஸ்ரீ காசி மடம், ஆச்சிராமம். |
| | | 6,12,600 | | 12415 | |

உத்தரவுப்படி

வித்துவான் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்

ஜுனியர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

Endowments created by His Holiness

# Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal

## Head of Sri Kasi Mutt, Tirupanandal

for feeding of Brahmins, Ascetics & the poor etc.,
on Sri Kumaragurupara Swamigal Maheswarapuja (Memorial) Day
from Tirukkedar situated at a height of 12,000 feet on the Himalayas in the north
to Kanyakumari in the south of India

| Serial Number | Endowment Number | Capital Rupees | Places where feeding is conducted | Amount Spent Rs. | Names of persons who supervise the feeding |
|---|---|---|---|---|---|
| 1 | 224 | 7,000 | Thirukedaram | 275 | Shri Ganesh Shankar, Kedarnath Panda, Kedarnath, Himalayas. |
| 2 | 215 | 7,000 | Rishikesh | 205 | Shri Swami Sivanandji Maharaj, Sivanantha Ashram, |
| 3 | 200 | [illegible],000 | Haradwar | 275 | Bholanath Ashram, Haradwar. [Rishikesh. |
| 4 | 263 | 5,600 | Prayag | 210 | Sankaracharya Swamigal Mutt of Joshi Mutt. |
| 5 | 11 | 10,000 | Varanasi | 500 | Sri Kumaraswami Mutt, Kedar Ghat, Varanasi. |
| 6 | 279 | 7,000 | Kalahasti | 205 | Sri K. Subramanya Aiyer, B. A., Thiyagarajavilasam |
| 7 | 270 | 7,000 | Tiruthanigai | 205 | -do- -do- [Madras 5. |
| 8 | 297 | 5,000 | Vada-Tiruvalangadu | 145 | Sri M. Sabapathi Desigar, Vada Tiruvalangadu. |
| 9 | 220 | 7,000 | Kancheepuram | 205 | Sri K. Subramanya Aiyer, B. A., Thiyagaraja vilasam |
| 10 | 284 | 7,000 | Tirukazhukunram | 205 | -do- -do- [Madras-5. |
| 11 | 93 | 5,000 | Madras | 150 | Chennapuri Annadana Samajam, Madras. |
| 12 | 252 | 7,000 | Tiruvannamalai | 275 | Sri T. Shanmugasundara Oduvar, Thiruvannamalai. |
| 13 | 325 | 5,000 | Tirukkovalur | 145 | Sri K. M. Velayutham Pillai, Kilaiyur, Tirukkovalur. |
| 14 | 207 | 20,000 | Chidambaram | 150 | Sri Kasi Mutt, Chidambaram. |
| 15 | 265 | 5,000 | Achalpuram | 200 | Sri S. Nagalingam Chettiar, Achalpuram. |
| 16 | 302 | 5,000 | Kaveripoompattinam | 145 | Sri S. Sambandam Pillai, Kizhaperumpallam. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 145 | திரு. [illegible] |
| 17 | 262 | 5,000 | Sirkali | 145 | Sri V. Swetharanyam Aiyar, Advocate, Sirkali. |
| 18 | 250 | 7,000 | Vaitheeswarankoil | 205 | Sri R. S. Ramayya Pillai, Poongudi Mudaliar Choultry, [Vaitheeswarankoil. |
| 19 | 301 | 5,000 | Akkur | 145 | Sri T. R. Aghoram Iyer, Akkur. |
| 20 | 330 | 5,000 | Tirunallar | 145 | Sri Kuttiappa Pillai, Shroff, Sri Darbaranyeswarar Devasthanam, Tirunallar. |
| 21 | 287 | 10,000 | Mayuram | 290 | Sri G. S. Pillai (Kedaram Pillai) Pallavarayanpettai. |
| 22 | 139 | 1,00,000 | Tirupanandal | 4,000 | Sri Kasimutt, Tirupanandal. |
| 23 | 329 | 5,000 | Tiruvidaimarudhur | 145 | Dr. A. Sundaram, L. I. M., Tiruvidaimaruthur. |
| 24 | 253 | 7,000 | Swamimalai | 205 | Sri N. R. Ramanujam, B. A., Kumbakonam. |
| 25 | 268 | 6,000 | Tiruvaiyaru | 195 | Sri Annaswami Bhagavathar, Tiruvaiyaru. |
| 26 | 264 | 5,000 | Tirupugalur | 200 | Sri N. M. Somasundaram Pillai, Tirupugalur. |
| 27 | 238 | 7,000 | Tiruvarur | 205 | Sri D. Somaskanda Desigar, Tiruvarur. |
| 28 | 305 | 5,000 | Vedaranyam | 145 | Sri S. P. Venkatarama Iyer, Peri. Azha. Mu. Annasathiram, [Vedaranyam. |
| 29 | 261 | 7,000 | Tiruvanaikka | 205 | Sri T. Pattuswami Oduwar, Tiruchirapalli. |
| 30 | 318 | 5,000 | Viralimalai | 145 | -do- -do- |
| 31 | 271 | 10,000 | Palani | 290 | Sri Sadhu Swamigal Mutt (Sri Sivakumara Swamigal) Palani. |
| 32 | 239 | 2,50,000 | Madurai (Kanyakumari etc. Charities) | 500 | Sri Sivadharmabhaskara Sivasri M. K. Sundaresa Bhattar. Madurai. |
| 33 | 327 | 5,000 | Thiruperunthurai | 145 | Sri S. Murugesam Pillai, Tiruloki. |
| 34 | 258 | 5,000 | Tirukutralam | 195 | Sri A. C. Shanmuga Nainar Pillai, B. A., B. L., Courtallam. |
| 35 | 247 | 5,000 | Old Papanasam | 145 | Sri D. Maragathasubramania Pillai, Ambasamudram. |
| 36 | 297 | 5,000 | Tirunelveli | 145 | Sri C. S. Arunachalam Pillai, Ganapathi Mills, Thazhaiuthu |
| 37 | 21 | 9,000 | Srivaikuntam | 300 | Sri T. M. Kumaraguruparan Pillai, B.A., B.L., Srivaikuntam |
| 38 | 95 | 5,000 | Tiruchendur | 145 | -do- -do- |
| 39 | 324 | 5,000 | Utharakosamangai | 145 | Sri M. V. Raghavendra Rao, B.A., Dewan & Administrative Secretary, Ramnad Samasthanam, Ramanathapu[illegible] |
| 40 | 12 | 10,000 | Rameswaram | 330 | Sri Kasimutt, S[illegible] |
| 41 | 201 | 7,000 | Kanyakumari | 205 | |
| Total | | 6,12,[illegible] | | | |

உ

சிவ சிவ

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு



ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் ஸ்ரீவைகுண்டத்தில் அவதரித்தார்; திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளால் ஐந்தாவது ஆண்டில் ஊமை நீங்கிக் 'கந்தர் கலிவெண்பா'ப் பாடி அருள் பெற்றார்; மதுரை மீனாட்சியம்மை மீது 'பிள்ளைத் தமிழ்' பாடி அம்மையால் முத்தாரம் அணியப்பெற்றார்; திருமலைநாயக்க மன்னன் விருப்பத்திற்கு இணங்க 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலை அருளினார்; தருமை ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வழிபட்டுப் 'பண்டார மும்மணிக்கோவை' பகர்ந்தார்; ஆரூர், வேளூர் தில்லை தரிசித்து, நான்மணிமாலை, மும்மணிக்கோவை, பிள்ளைத் தமிழ், செய்யுட்கோவை முதலியன பாடினார்; காசி சென்று, 'சகலகலாவல்லிமாலை, 'காசிக்கலம்பகம்' முதலியன அருளினார்; சிங்கத்தின் மீதேறிச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அவன் உதவியால் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை முதலியன அமைத்தார்; வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலியோருக்கு வித்யா குருவாகத் திகழ்ந்தார்.

செயற்கரிய செயல்கள் பல புரிந்த குமரகுருபர முனிவர் பெருமானின் நினைவு உலகுக்குச் சிவநெறி காட்டி இன்பம் பயக்கும்.

வேத புருடனும் விராட் புருடனுமே
இனையநின் தன்மைமற் றெம்ம னோரும்
நினையவும் சிலசொற் புனையவும் புரிதலின்
வாழிய பெருமநின் தகவே
வாழியெம் மனனும் மணிநா வும்மே. – மதுரைக்கலம்பகம்

**ஸ்ரீ காசி மடம் : : திருப்பனந்தாள்**



குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் 4' 63.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

உ

சிவ சிவ

# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
# 275 ஆம் ஆண்டு மகேசுவர பூசைத் திருநாள்



சோபகிருது வைகாசி மாதம் 27 ஆம் நாள்

மதுரையில் ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தில்

# தேவார அகண்ட பாராயணம்

10—6—63 உ காலை 6 மணி முதல்

11—6—63 உ காலை 6 மணி வரை

( விவரம் அடுத்த பக்கங்களிற் காண்க )

வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய். — குமரகுருபர சுவாமிகள்

By order of His Holiness
Vidwan Muthu Kumaraswami Tambiran
Junior, Kasi Mutt, TIRUPANANDAL.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

சி

# மதுரையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

அகண்ட பாராயணத் தேவாரநிதி

10—6—63உ காலை 6 மண

இடம்: மதுரை ஸ்ரீ மீனுட்

பிற்கண்ட திருமுறைவாணர்கள் காலை மணி 6-8; 10-12; பிற்பகல் 2-3; 4-6 ஆகிய நேரங்களில் திருமுறைப்பணி செய்வார்கள்.

——: :——

1. தேவாரமணி திரு. S. சயிலப்ப ஒதுவார், மதுரை.
2. திரு. S. நமசிவாய முதலியார், தமிழ்மறை இசைவாணர் திருச்செந்தூர்.
3. திருக்களர் திரு. ரத்தினசபாபதி தேசிகர், தமிழ்மறையாளர், பள்ளத்தூர்.
4. திரு. M. சொக்கலிங்க ஒதுவார், திருமுறைப்பணியாளர், இராமேசுவரம்.
5. திரு. ரா. ஈசுவர ஒதுவார், திருமுறைப்பணியாளர், மதுரை.
6. தேவார இசைமணி திரு. வே. இலக்குமணன், ஸ்ரீ காசிமடம் சிவசிவ ஒலிமண்டப ஒதுவார், திருச்சிராப்பள்ளி.
7. திரு. தணிகாசலம், பிடில், சென்னை.
8. திரு. ரா. ரங்கசாமி, மிருதங்கம், பூவாளூர்.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

வ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ
வ சிவ

# நினைவுநாள் தேவார அகண்ட பாராயணம்

அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிறுவியுள்ள
பிற் கண்டவண்ணம் நடத்தப் பெறுவது
ரி முதல் இரவு 8 மணி வரை
சி சுந்தரேசுவரர் ஆலயம்



பிற்கண்ட திருமுறைவாணர்கள் காலை மணி 8-10; பிற்பகல் 12-2; 3-4; இரவு 6-8 ஆகிய நேரங்களில் திருமுறைப்பணி செய்வார்கள்.

——: :——

1. திரு. மு. சுப்பையா முதலியார், தேவார இசைப்பள்ளி ஆசிரியர், பழநி.
2. திருமுறைப் பண்ணிசைமணி திரு. மு. குமாரசாமி தேசிகர், பழநி.
3. திரு. நா. குற்ருலலிங்கம் பிள்ளை, திருமுறைத் தொண்டர், திருநெல்வேலி.
4. திரு. M. S. ஞானசம்பந்த தேசிகர், ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருவெண்ணெய்நல்லூர்
5. பண்ணிசை, திரு. கோ. வடுகநாத தேசிகர், திருப்புத்தூர்.
6. திரு. தெ. பி. சு. இராமலிங்க குருக்கள், ஸ்ரீ காசிமடம் தேவாரக் கட்டளை, கும்பகோணம்.
7. திரு. முத்து நடேசய்யர், ஹார்மோனியம், திருநெல்வேலி.
8. திரு. M. கல்யாணசுந்தர முதலியார், மிருதங்கம், திருப்புறம்பயம்.

வ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ

சிவ சிவ

# மதுரையில் இன்னிசைத் தேவார நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களால் நிறுவப்பெற்றது

## ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 275-ம் ஆண்டு மகேசுவர பூசைத் திருநாள்

## மதுரையில் திருமுறைத் திருவிழா

சாபகிருது ஸ்ரீ வைகாசி-மீ 27உ 10-6-63 திங்கட்கிழமை இரவு 8 மணி தொடக்கம்

திருமுறை வாணர்கள்:

1. சுரலய இசைவள்ளல் திரு. எம். கனகசபைப் பிள்ளை,
ஸ்ரீ காசிமடம் சிவ சிவ ஒலிமண்டப ஓதுவார், சிதம்பரம்.
2. சங்கீத பூஷணம் திரு. பி. சாமிநாத முதலியார், தருமபுரம்.
3. இசைத் தமிழ்மணி திரு. எம். சுப்பிரமணிய முதலியார், சிதம்பரம்.
4. தேவார பூஷணம் திரு. கோ. சாரங்கபாணி செட்டியார்,
ஸ்ரீ காசிமடம் சிவ சிவ ஒலிமண்டப ஓதுவார், காஞ்சிபுரம்.
5. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள் திரு. டி. எம். விசுவலிங்கம்
சபாபதி சகோதரர்கள், திருவாவடுதுறை.
6. திரு. S. சட்டைநாத முதலியார், திருமுறைப்பணியாளர், திருப்பனந்தாள்.
7. திரு. C. சுப்பிரமணிய பிள்ளை, பிடில், சென்னை.
8. திரு. V. வேல்சாமி முதலியார், வேய்ங்குழல், மதுரை.
9. திரு. அ. நடராஜ ஓதுவார், வேய்ங்குழல், திருவாவடுதுறை.

திரு. கோ. வேங்கடராமன், மிருதங்க ஆசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

வடக்காவணி மூலவீதி
மதுரை
1—6—63

சிவதர்ம பாஸ்கர
ம. க. சுந்தரேச பட்டர்
ஆசிருதம், மீனாட்சிசுந்தரேசுவரர் கோயில்

குறிப்பு: 1. மதுரை மீனாட்சியம்மன் சந்நிதியில் இரவு 8-மணிக்குத் தொடங்கிச் சிவம் பெருக்கும் பிள்ளையார் தங்கியருளிய ஆவணிமூல நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறையோதிக் காலை 6 மணிக்கு மீனாட்சியம்மன் சந்நிதியில் பூர்த்தி செய்வார்கள்.

2. ஸ்ரீ காசிமடத்துத் தருமக்கட்டளையின்படி, சிவதர்மபாஸ்கர ஸ்ரீ ம. க. சுந்தரேச பட்டர் அவர்கள் கண்காணிப்பில் அந்தணர்களுக்கும் அடியார்களுக்கும் ரூ. 500 செலவில் மதுரையில் நண்பகலில் அன்னம் பாலிப்பு நடைபெறும்.

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம். 4-63

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 14 || சோபகிருது-ஆ வைகாசித்திங்கள் 1-ம்வ [15-5-63] || இதழ் 5

# சிதம்பரச் செய்யுட் கோவை

முதுபெரும் புலவர்
ஸ்ரீமத் சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
திருவெண்காடு.



[கட்டுரை 68]

ஐந்தொழில்கள் 1 தோற்றம், 2 நிலை (இருப்பு), 3 இறுதி (அழிவு), 4 மறைப்பு (திரோபவம்), 5 அருள் (அநுக்கிரகம்) என்பவை. அவற்றுள் தூலமாகிய (1) தோற்றமும் (3) இறுதியும் உலகத்தின் தோற்றத்தையும் ஒடுக்கத்தையும் குறிப்பவை. இது வெளிப்படை, (2) நிலையோ, தோன்றிய உலகம் ஒடுக்கம் எய்தும் காலமளவும் நிலை பெறுவது. (பிரபஞ்சத்துட் பட்ட

உயிர்ப் பொருளும் உயிரில் பொருளும், முதல்வன் ஆணையால் ஏவப்படும் தத்தம் காரியத்தின் எல்லையைக் கடவாமல் நிற்றல் நிலை என்பதும் உண்டு. அதுவும் நிலை என்றதில் அடங்கும்) (4) மறைப்பு என்பது பந்தம். (5) அருள் என்பது வீடு.

### கேள்வியும் அதன் விளக்கமும்

தோற்றம் முதலியவை போல நிலைத்தொழிலையும் முதல்வன் செயல் என்றது எப்படி? தோற்றிய உலகம், அழிக்கப்புகும் அளவும், தானே நின்று நிலை பெறும். இதற்கு இறைவன் வேண்டா. தன் நாடு பகைவரால் அழிவு இன்றி நிலைபெறச் செய்வது அரசன் தொழிலாகும். அது போல உலகத்தை அழிப்பார் வேறு எவரும் இலர். உளர் ஆயின் அவரைத் தடுத்து உலகத்தை நிலைபெறச் செய்வது இறைவனுக்கு உளதாகும். முதல்வன் உலகை அழிக்காமல் நிற்கும் அளவும் வேறுயாரும் அவ்வுலகை அழிப்பார் இல்லாமையால், நிலைத்தொழில் முதல்வன் செயல் அன்று.

### விடை

ஒரு காலத்தில் ஒருங்கு தோன்றிய பொருள் இரண்டில், ஒன்று நெடுங்காலம் நிற்கின்றது. ஒன்று சிறிது காலம் நிற்கின்றது. இந்நிலை வேறுபாடு யாவர்க்கும் கண்கூடு. இந்நிலைவேறுபாட்டிற்கு வினை வேறுபாடு ஏது. உலகம் அறிவுடைய பொருளுலகம் (சேதனப் பிரபஞ்சம்) அறிவில்லாத பொருளுலகம் (அசேதனப் பிரபஞ்சம்) என்று இருதிறத்தது. உயிர்கள் சேதனப் பிரபஞ்சம். உயிரல்லாதவை அசேதனப் பிரபஞ்சம். அவற்றுள், சேதனப் பிரபஞ்சத்தின் நிலைவேறுபாடு அவ்வுயிர்களின் வினைவேறு பாட்டால் ஆயிற்று.

அவ்வேறுபட்ட இருவினையும் முதல்வனது ஆணையால் அன்றி வாரா. வாராமையால், நிலைத் தொழிலையும் முதல்வனே செய்கின்றான் என்னும் உண்மையை உணர்க.

தண்ணீர்க்குடம் தலைமேல் நிலைபெறுவது. அதைத் தாங்கிச் செல்லும் தாதியின் முயற்சி இன்றி அமையாது.

" வித்தகமாக்
காதிவினை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான் "

என்றதில் அம் முயற்சி விளக்கப்பட்டது.

அவ்வாறே, தோன்றிய உலகம் ஒடுங்குமளவும் நிலைபெறுவதும் முதல்வனது முயற்சி இன்றி அமையாது. அம்முயற்சி யாவது :– 'தோன்றிய உலகம் ஒடுங்குமளவும் நிலைபெறுக' என்னும் ஆணையாகிய சங்கற்பமே. "கரணத்தால் ஆக்காது நோக்காது நொடியாது சங்கற்ப மாத்திரையால் முத்தொழிலும் செய்யும் என்றுணர்க" சிவஞான மாபாடிய வசனம் இங்கு நினைத்தற்கு உரியது.

இவ்வாறு ஆகுக என்று எண்ணுதல் ஆகிய சங்கற்ப மாத்திரையால் செய்வது ஒன்று. கருவிகளைக்கொண்டு செய்வது ஒன்று. இவ்விரு வேறு வகைச் செயலால் (அவற்றைச் செய்யும்) வினைமுதல் (கர்த்தா) இருவகைப்படும். குயவன் கரணத்தால் செய்வதன்றிச் சங்கற்ப மாத்திரத்தால் செய்ய மாட்டான். இறைவன் சத்தி அவ்வாறு அன்றிச் சங்கற்ப மாத்திரத்தாலே எல்லாத் தொழில்களையும் செய்யும். அச்சங்கற்ப காரியத்திற்கு அறியாமையாற் கட்டுண்ணல் முதலிய குற்றங்கள் உளவாகா. ஏன்? அக் குற்றங்கள் அத்தகைய செயலுக்குப் பகை. அப் பகையாய குற்றங்கள் குயவன் முதலோரிடத்தில் உளவாகும். ஏன்? கருவிகளைக்கொண்டு செய்யும் காரணத்தால். அச்செய்திக்கே அக் குற்றங்கள் பகையல்ல.

இது வரையில், நிலைத்தொழில் முதல்வனது சத்தியின் செயலே என்பது விளக்கப்பட்டது. சத்தி செயலைச் சிவன் செயலாகச் சொல்வது அபேதத்தால். தோற்றமும் அழிவும் அறிவு இல்லாத பொருள் (அசேதனவத்து). உலகத்திற்குரியன என்று முன்னர் உணர்த்தப்பட்டது. படவே, இரண்டாவது தொழிலான நிலை சிவசத்திதொழிலாதல் இதுவரை விளக்கப் பட்டது என்பது விளங்கும். இனி நான்காவது தொழிலை (மறைப்பை)க் குறித்து அறிவோம்.

### கேள்வி

மறைப்பாவது அநாதியாகிய ஆணவ மலத்தின் காரியம். அதனை முதல்வன் செயலாகச் சொல்லுவது எப்படி?

### விடை

(அ) முற்றுணர்வுடையவனே முதல்வன் ஆவான். உலகில் உயிர்கள் அடையும் துன்பங்கள் எல்லாவற்றையும் உணர்தல் முற்றுணர்வு உடைமையால் நிகழ்கின்றது.

(ஆ) பேராற்றல் உடையவனே முதல்வன் ஆவான். உயிர்கள் எல்லாவற்றையும் ஒருங்கே விடுபேறு அடையச்செய்ய வல்லன் ஆதல் அப்பேராற்றல் உடைமையால் நிகழ்கின்றது.

(இ) 1. சிவன், சங்கரன் முதலிய பெயர்களைக்கொண்டும், அவனது பெருங்கருணையை அறியலாம். 2. விருப்பும் வெறுப்பும் இன்றி, எல்லாவுயிர்களிடத்தும் ஒப்பநிகழ்வதாலும் அக்கருணைப் பெருக்கத்தை உணரலாம். 3. தொடர்பு குறித்தலின்றி (சம்பந்தம் ஒன்றுமே இல்லாமல்), பிறர் துன்பத்தைக் கண்டக்கால், அத்துன்பத்தை, அந்நொடியிலே நீக்குவதற்கு மனத்தெழுச்சி விளையும். அம்மனத்தெழுச்சியே 'பெருங்கருணை' எனப்படும். அப்பெருங்கருணையை உடையவனே முதல்வன் ஆவான். எல்லாவுயிர்களையும் ஒருங்கே விடுபேறு அடையச்செய்தலில் ஒருப்பாடு மிக்குடையன் ஆதல் அவனுக்குக் கூடும்.

இத்தன்மைகள் எல்லாவற்றையும் உடையவன் ஆவான் முதல்வன் ஆயினும், உயிர்களால் அநாதிமுதல் தேடிச் சேர்க்கப் பட்டுப் பல வேறுவகையாய் நின்ற துன்பங்களை யெல்லாம் விளைவிக்கும் வினைவலியினை (கர்ம பலத்தை)யும் எல்லாப் பெருங்கொடுமைக்கும் மூலமாகிய சகசமலம் எனப்படும் ஆணவத்தின் சக்திகளையும் அவ்விரு (கர்மம் ஆணவம்) மலங்களால் வரும் துன்பங்களையும் கெடுத்து, எல்லாவுயிர்களையும் ஒருங்கே விடுபேறு அடையச் செய்யாமைக்கு என்ன காரணம்? (இடையில் இக்கேள்வி எழும்). இதற்கு விடை இது:-

உள்ளங்கையில் ஏந்தியதீயின் சூட்டினை நிகழவொட்டாமல், அதற்கு மாருன மந்திரத்தை உச்சரிக்கும் காலம்அளவும் குளிகை தடுத்து நிற்கும். அதுபோல, அம்முதல்வனைச் சிறப்பியல்பால் உணரும் மெய்யுணர்வு தொன்றுமளவும் அவனது பெருங்கருணை உயிர்களிடத்தில் ஒருங்கே நிகழாதபடி அவ்வம்மலசக்திகள் தடுத்து நிற்கும். அம்மலங்கள் உயிர்க்குற்றம் அல்லவோ? அவ்வம் மலசத்தியின் வழிநின்று அவற்றை நடாத்துவதாகிய அம்முதல்வனது சங்கற்பமே எல்லாவுயிர்களையும் ஒருங்கே வீடு பேறு அடையச் செய்யாமைக்குக் காரணம் ஆகும். அவ்வாறு மலசத்தியின் வழிநின்று, அவற்றை நடாத்துவதாகிய முதல் வனது சங்கற்பமே 'மறைப்பு' என்னும் நாலாந்தொழில்.

திருவாசகம், 'பந்தமும் ஆய் வீடும் ஆயினர்' என்றது. அதில் அறிவித்தபடி பந்தமாதல் இம்மறைப்புத் தொழிலால்தான். மறைப்பு என்னும் தொழில், முதல்வன் காரியமாதலால்தான் உயிர்களுக்கு அறிவும் செயலும் இடையிடையே விளங்கியும் மடங்கியும் படிமுறையால் மேற்பட்டு நிகழ்கிறது. இது திரோ தான சக்தியின் காரியம். முதல்வன் செயல் ஆகக் கூறப்படினும் அவனது சத்திக்கே உரியது. இவ்வாறே ஐந்தொழிலும் சிவசக்திக்கே (முதன்மையால்) உரியவாகின்றன. ஐந்தொழிலும் திருக்கூத்து என வழங்கப்படும். ஆட்டு — ஐந்தொழில். ஐந்தொழிலும் இறை வன் விளையாட்டு என முற்கட்டுரையில் அறிந்தோம். அவ் விளையாட்டும் இறைவிக்கே உரியது. இறைவனுக்கு உபசாரமே அன்றி உண்மையில் இல்லை. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில், 'கும்பாதி காரியம்' என்னும் அரும்பெரும் பொருட்பாடலை ஈண்டுக் காண்க.

"சீராட்டு நினக்கில்லை; அச் சீராட்டுஞ் சிறுமருங்குற்
பேராட்டி விளையாட்டுஉன் பெயர்த்துஆகி நடந்ததே"

(தொடரும்)



# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்
# சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி*

தொகுத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

[மலர் 14. இதழ் 4-ன் தொடர்ச்சி]

பெருநலத்தைத் தம்முள் — பிறங்க அம்பலத்தே
சிறுநகைஐம் மாதத்தில் — செய்தருளும் சற்குருவே. 11

அச்சபையில் தீட்சிதராம் — அப்பையர் இம்மதலை
இச்சபையோன் மைந்தன்என — எண்ணலுறும் சற்குருவே. 12

பெருவிருப்பால் அன்னைதன் — பீரங் கொடுத்தால்
அருவெறுப்பால் உண்டுவந்த — அற்புத!என் சற்குருவே. 13

சபாபதிப் பிள்ளையெனும் — தன்சோ தரரை
உபாத்தியாய ராக — உவந்தருளும் சற்குருவே. 14

பகரும் சிறுவயதில் — பள்ளிதனில் சென்னை
நகரில் படிக்கும் — நடிப்பருளும் சற்குருவே. 15

பொய்யுரையா அன்னோன் — புராணப் பிரசங்கத்தின்
மெய்யேடு சொல்ல — விழைந்தருளும் சற்குருவே. 16

ஒருநாளில் அன்னோன் — உரைசெய்த பாட்டின்
பொருள்பல விரித்துப் — புகன்றருளும் சற்குருவே. 17

பீடுநன் கோர்ந்தே — பெரியோன் வியப்புற்றே
ஏடு படியாமல் — இசைக்கவுற்ற சற்குருவே. 18

திருத்தணிகைத் தேவனுக்குச் — செந்தமிழ்ப் பாமாலை
பொருத்தமா ஒன்பதிலே — போற்றியருள் சற்குருவே. 19

பெரியகலா வல்லவரும் — பேசருநூல் கேட்டற்கு
உரியபொருள் அன்பால் — உரைத்தருளும் சற்குருவே. 20

(தொடரும்)

* திரு.ச. மு. கந்தசாமிபிள்ளையவர்கள் இயற்றியது.

# சிலப்பதிகார ஓரங்க நாடகம்

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர்,

உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள்,

M. A., B. L., M. O. L.,

தமிழ்க்கலை, மொழிஇயல் துறைத் தலைவர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.



[மலர் 14, இதழ் 4-ன் தொடர்ச்சி]

## கொலைக்களக் காதை

### நான்காம் காட்சி

### I

கொலைக்களக் காதையின் நான்காம் காட்சி மறுபடியும் பொற்கொல்லன் வீட்டின் அருகே நடைபெறுகிறது. அவன் வீட்டின் அருகே இருந்த அக்கசாலையின் மதிலுக்குள்ளே கோவலனை நிறுத்திச் சென்றானல்லவா பொற்கொல்லன்? அங்கேயே தங்கியிருக்கின்றான் கோவலன்; கொல்லனது சூழ்ச்சி பலிப்பதற்கு வாய்ப்பான பலியாகத், தானே வந்து அந்த வஞ்சக வலைக்குள் மாட்டிக் கொண்டு நீங்காது நிற்கின்றான். ஆனால், பொற்கொல்லனுக்கு இந்த வெற்றியைத் தர நம் புலவர் கருதவில்லை; அதற்கேற்றபடி காதையும் உருவாகவில்லை. திடீரெனப் பொற்கொல்லனைக் கண்டதும் கோவலன், தான் தன் சிலம்பினை அவனிடம் மதிப்பிடக் காட்டுகிறான். பொற்கொல்லன் ஒரு கள்வன்; ஆதலின் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்கிறான். எனவே, திட்டமிட்டுச் செயலாற்றும் எதிர்நிலைத் தலைவனது இயல்பு பொற்கொல்லனிடம் இல்லை. அவன் ஒரு வஞ்சகன்; இழிமகன்; வாய்ப்பினைப் பயன்படுத்தும் 'சந்தர்ப்ப வாதி'. ஆதலின், உலகச் சூழ்நிலையே ஊழ் என்றும் தீவினை என்றும் அவ்வந் நிலைக்கேற்பக் கூறப்பெறுவதாய் விளைந்து முற்றித் துன்ப அனுபவமாக நிகழ்வதற்குப் பக்குவப்

பட்டுள்ளது. இந்தச் சூழ்நிலையே அவனைச் சுற்றி வளைந்து நின்று, மெள்ள இறுகிக் கொள்ளும் வலைபோலக் காட்சி அளிக்கிறது புலவருக்கு; 'தீவினை முதிர் வலைச் சென்று பட்டிருந்தான் கோவலன்' என்கிறார். 'தீவினையாகிய ஆழ்ந்த வலைக்குள்ளே சென்று அகப்பட்டிருந்த கோவலனைக் குறுகிச் சென்றான் பொற்கொல்லன்' என்று பொருள் எழுதுகிறார் அடியார்க்கு நல்லார். அவரே 'தீவினை முதிர்வலை' என்பதை 'தீ முதிர் வினை வலை' என்று மாற்றி அமைத்துத் 'தீய பழவினையாகிய வலைக் குள்ளே அகப்பட்டிருந்த கோவலனைப் பொற்கொல்லன் குறுகச் சென்றான்' என்றும் மற்றொரு பொருள் கூறுகிறார். பொற் கொல்லன் சூழ்நிலையின் உறுப்பாகித் தொழிற் படுகின்றான் என்பதே புலவர் கருத்து. பரத்தையரைப் பாராட்டும் சூழ்நிலையைக் கண்டோம்; காமம் தன் உயர்வினை இழந்து நிற்கும் போது அந்தச் சூழ்நிலையில் களவும், கொலையும் எதிர்பாராத வகையில் எழலாம் என்பது புலவர் கருத்தாம். ஐம்பெரும் பாவங்கள் என்று நாம் சொல்பவை ஒன்றற்கொன்று தொடர்பு உடையன என்பது பழையதொரு கருத்து.

## II a

கோவலனைப் பொற்கொல்லன் அணுகுகின்றான். தன்னுடன் வந்த ஊர் காப்பாளரை அவனுக்கு அறிமுகம் செய்கிறான். அரசன் கட்டளையின்படி சிலம்பு காண இவர்கள் வந்துள்ளார்கள் என்கிறான்; மன்னவன் சிலம்பு வாங்க எண்ணி இவர்களை அனுப்பினான் என்று கோவலன் கருதும்படி கொல்லன், பேசுகிறான். வாங்குதலைப் பற்றி அப்பேச்சில் ஒரு குறிப்பும் இல்லாமையால் ஊர்காப்பாளர் அதனைப்பற்றி அறிவதற்கில்லை. 'வலம்படுதானை மன்னவன்' என்று கூறும் கொல்லன், தன் பேச்சில் பாண்டியனைப் புகழ்கிறான். அதில் ஒரு கிழறைப் பொருளை (irony) நாம் காண்கிறோம். ஆனால் அவன் உள்ளம் அவனை அறியாமல் அவன் அளவில் அரசன் தோற்றத்தை உணர்கிறது. ஆனால் அவனது மேல் - மனமோ வஞ்சம் தோன்றாத வகையில் அரசனது வெற்றியையே தான் நாடுவது போல எல்லோரும் உணர்ந்து கொள்ளும்படி இவ்வாறு பேசுகிறது. அந்தச் சிலம்பில் அமைந்த வேலைப்பாட்டின் அரு

மையை எல்லாம் ஊர்காவலர்களிடம் காட்டுகிருன் கொல்லன். அப்படிக் காட்டுகின்றவனே 'பொய்வினைக் கொல்லன்' என் கிருர் புலவர். 'பொய்ம்மையே தன் தொழிலாக உடையவன் அவன்'. எனவே அவன் காட்டுவது சிலம்பின் சிற்பத் திறத்தை அல்ல. அரசியின் சிலம்பு கள்வன் கையதானுல் 'கொன்றச் சிலம்பு கொணர்க' என்பதே அரசன் கட்டளை. ஆதலின், கோவலன் கையிலுள்ள சிலம்பு அரசியின் சிலம்பு என்பதை அவர்கள் மனங்கொள்ள இவ்வாறு விளக்குகிருன். பாண்டி மாதேவியின் சிலம்பு எப்படி இருக்கும் என்பதை அவர்களுக்கு நினைவூட்டி அதுபோல இதுவும் இருக்கிறது என அவர்கள் உள்ளத்தே உடன்வைத்துக் காணும்படி செய்து 'இதுவே அது' என முடிவு செய்யத் தூண்டுகிருன்.

b

இந்தக் காட்சியில் ஒரு ஐயம் எழுகின்றது. கொல்லன் ஊர் காப்பாளரிடம் 'கோவலன் கள்வன்' என நிலைநாட்ட முயலுகின்ருன். ஆனுல் கோவலனே ஒரு சொல்லும் இதற்கு எதிராகக் கூறவில்லை. இவ்வாறு இவன் வாய்திறவாமல் இருப்பது எதனுலோ என்ற கேள்வி எழுகிறது. அடியார்க்கு நல்லார் இதற்கு ஓர் அமைதியைக் கூற முற்படுகிருர்; பொய் வினைக் கொல்லன் புரிந்துடன் காட்ட' என்ற அடிக்குத் தன் கருத்திற்கு ஏற்பப் பொருள் எழுதுகின்ருர். கோவலனை அக்கசாலையில் இருத்திவிடுகிருனும் கொல்லன்; பின் அந்தச் சிலம்பின் செய்தியை எல்லாம் ஊர் காப்பாளர்க்கு வெளியே வந்து கோவலனினும் வேருக நின்று அவர்களோடு ஒருங்கே சேர்ந்து காட்டுகிருனும் அக்கொல்லன். இதுவே அவர் கூறும் பொருள். 'புரிந்து' என்பதற்கு 'வேருக அழைத்து' என்று பொருள் கூறுகின்ருர். எனவே பொற்கொல்லன் ஊர் காப் பாளரோடு சேர்ந்து கோவலனின் நீங்கினுன், என்பது விளங்கு கிறது. 'அவரை வேருக அழைத்துக் கோயிலில் இருக்கின்ற தனிச்சிலம்போடு பொருந்தச் சொல்லிக் காட்டினுன்' என்பது அடியார்க்கு நல்லார் கூறும் பொருள்; 'புரிந்து எனவே அவனின் நீங்கி என்பதும், உடன் காட்ட எனவே அச்சிலம் போடு ஒரு தன்மையாக ஒப்புக் கூறி என்பதும் கொள்ளப் பட்டன' என்றும் அவர் எழுதுகிருர். பொற்கொல்லனேடு

ஊர் காப்பாளர் என்ன பேசுகின்றார்கள், என்ன செய்கின்றார் கள் என்பதை எல்லாம் எண்ணிப் பார்க்கும் இழிதகைமை கோவலனிடம் இல்லை. எவரையும் நம்பும் இயல்புடைய இவன், பொற்கொல்லனை நம்பிச் சிலம்பை அவன் கையில் தருகிறான். ஊர்காப்பாளர் இருக்கும் போது திருடு போகும் என்று அவன் அஞ்ச வேண்டியதில்லை. தீவினை வருவதை அறிந்தவனே; அதனை எதிர்பார்த்தே அமைதியோடு இருக்கின்றான்; ஆனால் தீமை இங்கே நிகழும் என அவன் அங்கு எதிர்பார்ப்பதற்கில்லை. அரசனிடம் சென்று அரசன் எதிரே தீமை நிகழும் என எதிர் பார்க்கின்றானே யன்றி வேறுவகையாக நடக்குமென அவன் எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே இங்கும் கூட அவன் எதிர் பாராத நிலையில் செயல்கள் நிகழுகின்றன.

c

பொற்கொல்லன் கோவலனே கள்வன் எனவும், அதனால் கொலைப்படு மகனே எனவும் ஊர்காப்பாளர் உடன்படுமாறு உளங்கொளக் காட்ட முயன்றும் முதலில் வெற்றி பெற்றதாகத் தோன்றவில்லை. கோவலனுடைய உடற் கூறுகளைக் காண்கிறார்கள் ஊர்காப்பாளர். தாம் அறிந்த கள்வரது அனுபவத்தைக் கொண்டு இத்தகைய அடையாளம் கள்வனிடம் இருக்க முடியாது என்று அவர்கள் எல்லோரும் உணர்கிறார்கள். கோவலனது கள்ளங் கபடம் அற்று இருக்கின்ற நிலையும் அவர்களது அந்த முடிவைத் தான் வற்புறுத்துகின்றது. 'இலக்கண முறைமையின் இருந்தோன் இங்கு இவன் கள்வன் அல்லன்; கொலைப் படுமகன் அல்லன்' என்கின்றனர்; தங்களுடைய ஊர் காவல் தொழிலில் கள்வர்களைத்தாம் நன்கு அறிந்த அருந்திறமை எல்லாம் தோன்ற இவ்வாறு உறுதியாகக் கூறுகிறார்கள். கோவலனுடைய இருப்பே அவனுடைய புகழை இவ்வாறு பாடுவதாகப் புலவர் இக்காட்சியை அமைத்துள்ளார்.

d

இங்கேதான் பொற்கொல்லனுடைய ஆற்றல் வெளிப்படுவதற்கு ஒரு வாய்ப்பு எழுகிறது. தான் எண்ணிய எண்ணம் பழுதாகும் போல அவனுக்குத் தோன்றுகிறது. இருந்தாலும் சோர்வு ஒன்றும் தோன்றாதபடித் தன் உறுதியையே நம்பிய

வனுய் அவ் அருந்திறல் மாக்களையும் எள்ளி நகையாடுகின்ருன். நகையாடினுல் போதுமா? அவர்களைத் தன் முடிபுக்குத் திரும்பி விடுமாறு சூழ்ச்சி செய்து பேசுகின்ருன். இங்கும் 'கருந்தொழிற் கொல்லன்' என்று அவனை நமக்கு நினைப்பூட்டுகின்ருர் புலவர். கருந்தொழிலாவது கொலைத் தொழில் கொல்லன்; கொலையே தொழிலாக உரிமை கொண்டுள்ளான் என்று புலவர் நினைப் பூட்டுகின்ருர். அனுபவம் பற்றி அவர்கள் பேசினுர்கள், அந்த அனுபவத்தை நூலோடு வைத்துப் பார்த்துப் பொருள் கொள் வதே தக்கதாகும் என்று அவர்கள் காணும்படி செய்து பேசுகி ருன் கருந்தொழிற் கொல்லன். அவனையும் அறியாமல் களவு நூலில் தான் கை வல்லவன் என்பதை இந்த நிலையில் பொற் கொல்லன் காட்டிவிடுகின்ருன்.

e

காப்பியங்கள் பண்டைக் காலத்தில் கலைகளையும், பல கலை யின் கருத்துக்களையும் வாய்ப்பானதோர் நாடகச் சூழ்நிலையில் வெளிப்படுத்திப் பொதுமக்களுக்கு அறிவு கொடுத்தும் கடமை யையும் மேற்கொண்டிருந்தன. இவ்வாறே இக்காப்பியத்தில் இசைக்கலை, வணிகக் கலை முதலியன கூறப்பெற்று இருப்பதைக் கண்டோம். இங்கே களவு நூற்கலையும் அதன் நுட்பமும் வெளியாகின்றன. கதையோடு கதையாக இவை அமைந்து விடுவதுதான் இங்குள்ள நுட்பம். களவு நூலில் கைவந்த பொற் கொல்லன் திறத்தை இவ்வாறு வெளியிடுவது பொருத்த மாகிறது; கலை வளர்ச்சிக்கும் இடம் ஏற்படுகிறது.

## III a.

முதலில் சுருக்கமாகக் களவு நூலின் நுட்பத்தை விளக்கு கின்ருன். களவே தமக்குப் பிழைப்பாகக் கொண்டவர்கள் எட் டினை வழுவாத பெருந் துணையாகக் கொள்வர். அவை :– 1. மந்திரம். 2. தெய்வம். 3. மருந்து. 4. நிமித்தம் அல்லது சகுனம். 5. தந்திரம். அதாவது களவுநூல் சொல்லும் களவு முறை. 6. இடம். 7. காலம். 8. கருவி என்பவையாம். இவ்வாறு சுருங்கக் கூறிய பின் அவற்றைக் களவுநூல் வழியே பொற்கொல்லன் விவரித்துக் கூறவில்லை. அப்படிக் கூறினுல் கதையில் விறுவிறுப்புத் தோன்ருது. ஊர் காப்பாளரும் நாமும்

உறங்கி விடுவோம். அவன் கொண்ட முயற்சி வெற்றி அடையாது. ஆதலின் அந்த எட்டு வழியையும் பின்பற்றுவோர் வியத்தகு முறையில் வெற்றி அடைவதையே நாடக நயம் தோன்ற எடுத்துக் கூறுகிறான். அதுமட்டும் அன்றி அந்த எட்டும் ஏதோ கோவலனாலேயே பின்பற்றப்பட்டன போலவும், கோவலன் களவாடும் நிலையில் எதிரே தோன்றுவது போலவும், கள்வன் என்று அறியாது ஏமாந்து போனால் அரசன் தண்டனைக்கு ஊர்க்காப்பாளர்கள் உட்படுவார்கள் என்றும் அவர்களை முன்னிலைப் படுத்திக் கூறுகின்றான். களவு நூல் உண்மையைப் படர்க்கையில் கூறாது முன்னிலையும் தன்மையும் விரவி வர எதிரே தோன்றுவதுபோல நாடக நயம் எல்லாம் தோன்ற நடித்துத் தன் சிறப்பினை விளக்கி விடுகிறான் கொல்லன். எட்டினையும் தொடர்ந்து விளக்குவதற்கு முன், ஊர் காப்பாளரை முன்னிலைப்படுத்தி ஒன்று கூறுகிறான் 'அவன் உங்கள் மேல் மருந்து தூவியுள்ளான்' என்பதுபடப் பேசுகிறான். 'கள்வனுடைய மருந்தில் சிக்குவீர்களானால் உமக்கே பெருங்குற்றம் உண்டாகும்: பெரும்புகழ் படைத்த மன்னன் ஒரு சிறு கள்வனைக் கையில் அகப்பட்டும் பிடிக்கவில்லை, என்ற இகழ்ச்சியைப் பொறுப்பானோ? நீங்கள் ஒருவரும் தப்பமாட்டீர்கள். ஆகவே கையிலகப்பட்ட கள்வனை அழித்து ஒழிப்பதே கடன்' என்பது தோன்றப் பேசுகிறான். 'மருந்திற் பட்டீராயின் யாவரும் பெரும்பெயர் மன்னரில் பெரு நவைப்பட்டீர்' என முன்னிலைப் படுத்திப் பேசுகிறான். 'அச்சமே கீழ்களது ஆசாரம்' என்பதை உணர்ந்தோன்; ஆதலின் அச்சத்தையே முதலில் அவர்கள் உள்ளத்தில் தூண்டுகிறான்.

b

இனி, களவு நூல் கூறும் எட்டினையும் முறையே விளக்குகிறான். அவர்களின் தான் வேறு என்று நில்லாது அவர்களோடு ஒருங்குசேர்ந்து பொதுமையில் கள்வர் மந்திரத்தைப் பயன்படுத்தும் வியத்தகு நிலையைப் பேசி, அணிநூல்வகையில் ஒரு கேள்வியை எழுப்புகின்றான். 'தேவகுமாரர்கள் கட்புலனாவதில்லை; அதுபோல இக்கள்வர்களும் தங்களுடைய மந்திரத்தை நாவில் உருப்போடுவார்களானால் அவர்களை நாம் காணமுடியுமா?' என்கிறான். இவ்வாறு கேட்கின்ற கேள்வியின் முறை

யிலேயே, 'முடியாது' என்கின்ற விடையும் தோன்ற எல்லோரையும் வியக்கச் செய்கின்ருன். 'அவர்கள் வழிபடும்தெய்வத்தின் தோற்றம் அவர்கள் கண் எதிரே தோன்றவேண்டும் என்று தியானித்து மனத் தெளிவோடு நினைப்பாராயின் அவர்கள் தாங்கள் திருடிய பொருள் கையிலேயே இருப்பதனை நமக்குக் காட்டிக்கொண்டே இருப்பார்கள்; நாம் ஒன்றுஞ் செய்ய முடியாது இருப்போம். அவர்கள் தப்பிப் பெயர்ந்து போவார்கள். இவ்வாறு பொதுநிலையில் அவர்களுடைய வியத்தகு செயலைப் படர்க்கையில் பேசுகிருன். அடுத்து ஊர்க்காப்பாளரையும் உடன்படுத்தித் தன்மையில் பேசிக் கள்வரது வியத்தகு செயலைக் கேள்வியாக எழுப்புகின்ருன். 'மருந்தினைத் தூவி, நாம் இருந்த இடத்தில் இருக்க, நம்மை மயக்குவார்களானுல், நாம் இருந்த இடத்தைவிட்டு அசையத்தான் ஏதேனும் இடமுண்டா?' என்று கேட்கிருன். மறுபடியும் பொதுநிலையையே வற்புறுத்துகின்ற நிலையில் நினைப்பூட்டுவான் போலப் படர்க்கையில் பேசுகின்ருன். அவர்களுக்குக் கைவந்த சகுனம் எதிர்ப்பட்டாலன்றி அவர்கள் களவு செய்யப் புகுவதில்லை; மிக எளிதாகக் களவு செய்துவிடலாம் என்ற இடத்திலேயும் புகுவதில்லை. பெறுதற்கரிய பொருள் தானே வந்து கைப்புகுந்தாலும் சகுனம் வாய்க்காத போது களவு செய்யப் புகமாட்டார்கள். மேலும், களவு நூலில் கூறப்பெற்றுள்ள தந்திரங்களை அதன்படி செய்ய எண்ணுவார்களானுல் அவர்கள் மண்ணுலகில் இங்கேயே இருந்தாலும், விண்ணுலகில் உள்ள இந்திரன் அணிந்து கொண்டிருக்கும் ஆரத்தை இந்திரனுலன்றிப் பிறரால் அணிய முடியாத ஆரத்தை—எளிதில்பெற அவர்கள் எண்ணினுல் எண்ணியபடியே பெற்றுவிடுவார்கள். அடுத்து இடம், காலம் கருவி என்றிவற்றைக் கூற வருபவன் அவற்றின் வியத்தகு பயனைக் கேள்வியாகக் கேட்டு வியக்கின்ருன். 'இந்த இடம், இந்தப் பொருள் கொள்ளுவதற்கு தக்க இடம்' எனத் தம் நூல் வழியே துணிந்து வருவார்களானுல் அந்த இடத்தில் அவரை யார்தான் கண்ணுல் பார்க்க வல்லவர்கள்? அவ்வாறே இந்தக் காலம் தான் இந்தப் பொருளைத் திருடுவதற்கு ஏற்றகாலம் என அவர்கள் தம் நூல் வழியே ஆராய்ந்து முடிவு செய்து திருடிக் கைப்பற்றுவார்களானுல், தேவர்களேயானுலும் வேறுவித ஆற்றல் உடையவர்

களானாலும் அவர்களைத் தடுப்பது என்பது எப்பொழுதேனும் நிகழுமா? அவ்வாறே "தம் நூலில் கூறிய கருவிகளைக் கை யாண்டு பெறுதற்கரிய பொருளைக் கைப்பற்றுவார்களானால் இந்தப் பெரிய நிலப் பரப்பிலே அந்தத் திருட்டைக் கண்டு பிடிப்பவர்கள் யாரேனும் உண்டா?"

"மந்திர நாவிடை வழுத்துவ ராயின்
இந்திர குமரரின் யாங்காண் குவமோ
தெய்வத் தோற்றந் தெளிகுவ ராயிற்
கையகத் துறுபொருள் காட்டியும் பெயர்குவர்
மருந்தின் நங்கண் மயக்குவ ராயின்
இருந்தோம் பெயரும் இடனுமார் உண்டோ
நிமித்தம் வாய்த்திடின் அல்லது யாவதும்
புகற்கிலர் அரும்பொருள் வந்துகைப் புகுதினுந்
தந்திர கரணம் எண்ணுவ ராயின்
இந்திரன் மார்பத் தாரமும் எய்துவர்
இவ்விடம் இப்பொருள் கோடற்கு இடமெனின்
அவ்விடத்து அவரை யார்காண் கிற்பார்
காலங் கருதி அவர்பொருள் கையுறின்
மேலோர் ஆயினும் விலக்கலும் உண்டோ
கருவி கொண்டுஅவர் அரும்பொருள் கையுறின்
இருநில மருங்கின் யார்காண் கிற்பார். (172–187.)

C

இவ்வளவும் கூறிய பின்னும், ஊர்காப்பாளர்களுடைய முகத்திலே இவன் பேச்சில் நம்பிக்கை வந்ததாகத் தோன்ற வில்லை. ஆனால் இதனை உணர்ந்த பொற்கொல்லன், மனம் சோரவில்லை. களவு நூல் முறையைத் தான் அறிந்த வகையில் விளக்கியும் பயனில்லை என்பதை அவன் உணர்ந்திருத்தல் வேண்டும். அவர்கள் அறிந்த ஒரு கள்வன் செய்தியைத் தன் திறம் எல்லாம் தோன்ற நடித்துக் காட்டுகிறான். களவுநூல் கைவந்தாரது வியத்தகு செயலை எட்டு வகையாக விளக்கியபின் அதனை ஊர்க் காப்பாளர் உளங்கொளச் சுருக்கித் திறம்பட முடிக்கின்றான். இரவு, பகல் என இரண்டு என்பது இக்கள்வர் களுக்கு இல்லை. இவர்களுடைய திருட்டின் வேறுபாட்டை

எல்லாம் சொல்லப் புகுந்தால் சொல்லி முடியாது. அவர்களுக்குத் தப்பிப் பிறர் ஒளிந்து கொள்ளும் இடமும் இல்லை.

d

இவ்வளவும் கூறியமையால் களவு நூலில் எவ்வளவு அனுபவம் வாய்ந்தவன் இவன் என்பது விளங்குகிறது. இல்லையானுல் பாண்டிமாதேவியின் சிலம்பைக் கடுங்காவலுக்கிடையே இவன் திருடி இருக்க முடியுமா? அந்தத் திருட்டின் அனுபவத்தையே, முன்னர் அரசனிடம் பேசும்போது வேருெரு கள்வன் மேல் ஏற்றிக் கூறும் வழியால் கோவலனைக் கள்வன் ஆக்கினுன். 'கன்னகம் இன்றியும், கவைக்கோல் இன்றியும் துன்னிய மந்திரம் துணைஎனக் கொண்டு, வாயிலாளரை மயங்கு துயில் உறுத்து, கோயில் சிலம்பு கொண்ட கள்வன்' என்று கூறிய கூற்று இவனுக்கே பொருந்தும் என்பது இப்போது நன்கு விளங்குகிறது. இவன் திறம்படப் பேசவும் வல்லன் என்பதும் இவன் பேசிய பேச்சிலிருந்தே விளங்கக் கண்டோம்.

IV a

இருப்பினும், கோவலனது கள்ளமற்ற பான்மையில், நிலையான உறுதிகொண்ட ஊர் காப்பாளரை இப்படி எல்லாம் பேசி நம்ப வைத்துவிட முடியவில்லை. இங்கு ஒரு கதையைக் கூறத் தொடங்குகிருன். கள்வர்கள் எவ்வளவு எல்லாம் ஏமாற்ற முடியும் என்பதை ஓர் எடுத்துக் காட்டினுலாவது காட்டினுல் அந்த ஊர் காப்பாளர் நம்பமாட்டார்களா என்று எண்ணுகிருன். பாண்டியனது தம்பியிடம் நடந்த களவைப் பற்றியது இக்கதை. இக்கதை இவனே கட்டியது என்று கருதி 'ஒரு பொய்க்கரி கூறுகின்ருன்' என்று எழுதுகிருர் அடியார்க்கு நல்லார். அப்படியும் இருக்கலாம். ஆனுல் ஊர் காப்பாளர் அரண்மனைச் செய்தியை அறிந்தவர்களாதலின் தாங்கள் அறியாத கதையை அரண்மனையில் நடந்ததாக நம்புவார்களா என்று ஆராய்தல் வேண்டும். ஏதோ ஒரு திருட்டு நிகழ்ந்துள்ளது உண்மை. ஆனுல் அதனுடைய விளக்கமோ இவன் படைத்துக் கொண்டது எனலாம். ஊர் காப்பாளரால் அக்கள்வனைக் கண்டு பிடிக்க முடியாது போயிருத்தல் வேண்டும். ஆனுல் அதனை ஒரு குறையாக இவர்கள் கருதாதபடி கள்வனது திறத்தை வியத்தகு

முறையில் பொற்கொல்லன் விளக்குகின்ருன். இதனுல்தான் அவனைக் கண்டு பிடிக்க முடியாமல் போயிற்று என அவர்களுள் ஒர் ஆறுதல் கொள்ளலாம். 'முன்னெரு முறை ஏமாந்த நீங்கள் இனியும் ஏமாறுதல் ஆகாது' என்ற குறிப்போடு பேசுகிருன். இருந்தாலும் அவ்வாறு நேராகச் சொல்வது நாகரிகம் அன்று அல்லவா? இந்தக் கதையை அவன் கூறிவருகின்ற முறையைப் பார்த்தால் இவன் தானே திருடன் என்று கூட நமக்குத் தோன்றுகிறது.

b

இங்கே இவன் இந்தக் கதையை நாடகமாக நடித்தே விடுகின்ருன். இந்நாளைய திரைப்பட உலகில் அடிக்கடி காணும் காட்சிகளை இக்கதை நினைவூட்டுகிறது. எனவே, இக்கதை ஊர்க்காப்பாளர் உள்ளத்தையும் கவர்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்தக் கதையைக் கூறத் தொடங்குமுன், நேரே பாண்டியன் தம்பிக்கு நேர்ந்தது எனக் கூறித் தொடங்காது, கேட்போர் உள்ளத்தை விடுப்புநிலையில் வைத்தே விறுவிறுப்பை உண்டாக்க முயல்கின்ருன் – தூதர் கோலத்தில் வந்தான். அரண்மனை வாயிலிலேயே ஒடுங்கி இருந்து எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டான்; நன்ருக இருண்டதும் அந்த வல்லிருளில் பெண் கோலம் பூண்டு உள்ளே புக்கான். (மாதர் கோலத்திற்கு இருந்த வாய்ப்பினை இங்கு உணர்கிருேம். மதுரைச் சமுதாயத்தின் சூழ்நிலையை முன்னர்க் கூறியது இதனுலும் உறுதியாகிறது. வல்லிருளில் அத்தகைய மாதர் அரண்மனையில் தடையின்றி உள்ளே புகுதல் இதனுல் வெளியாகிறது.) விளக்குகள் எரிந்து கொண்டுதான் இருந்தன. ஆனுல் விளக்கிடும் நிழலிலே மறைந்து மறைந்து சென்ருன். களவில் கை தேறியவன் ஆதலின் ஒருசிறிதும் அவனிடத்தில் அச்சம் என்பதில்லை. சென்று பாண்டியனது இளங்கோவேந்தனை நெருங்கிவிட்டான். (இந்த இடத்தில்தான் இந்தக் கதை பாண்டிநாட்டு அரண்மனைவரலாறு எனச் சுட்டி, அதனுல் அவர்கள் உள்ளத்தை மேலும் கவர்கிருன்.) இளங்கோ வேந்தன் துயின்று கொண்டிருக்கிருன். ஆனுல் மின்னிப் பொலிகின்ற ஆரம் ஒன்று அவன் மார்பில் பூண்டு கிடந்தான். அந்த இருட்டில் அந்தப் பள்ளி அறையில் வயிரம் மட்டும் மின்னி நின்றது. அந்த மின்னலாலேயே அதன்

இருப்பை உணர்ந்து அந்தஒளியே தனக்கும் ஒளியாகச் சென்று அந்தக் கள்வன் அதனை விரைந்து எடுத்துக்கொண்டான். உடனே இளங்கோ தூக்கம் நீங்கி விழித்துக் கொண்டான். உறங்கும் போதும் பிரியாது காத்து அணிந்து வந்த ஆரம் அவனுக்கு உயிர் போன்றது போலும். அதனால் விழித்ததும் அதைத் தடவிப் பார்த்தான். ஏதோ ஒரு திருடன்தான், இப்போது அந்தப் பொழுதில் திருடினான் என்று உறுதி கொண்டான். அந்தத் திருடன் நெடுந்தூரம் போயிருக்க முடியாதாகையால் உடைவாளோடு உள்ள உறையை எடுத்து அதிலிருந்து உடைவாளை உருவி நாற்புறத்திலும் வீசினான். இதற்குள் அந்தத் திருடன் அந்த வாளின் உறையைக் கையில் வாங்கிக் கொண்டான். இளங்கோ வாளை வீசுந்தோறும் அந்த வாள் வீச்சை வாள் உறையின் வாங்கி மீட்டுக்கொண்டான். இவ்வாறு பலமுறையும் நிகழ்ந்தது. 'திருடன் எதிரில் இருந்ததால் வாளை வீசினேம். ஆனால் பயன் இல்லையே' என்று அலசிப் போனாலும் இளங்கோ வீரன் ஆதலின் வாய்விட்டு அரற்றவில்லை. எனவே, அவனோடு மற்போர் புரிந்து அந்தத் திருடன் ஆற்றலைக் காண முற்பட்டான். அப்போதும் அந்தத் திருடன் திறம்பட நடித்து மிக விரைவில் தாண்டிக் குதித்து இளங்கோவை அலைக்கழித்தான். தூணைத் தானாகக் காட்டினான். இளங்கோ கட்டிப்புரளவரும்போது பின் வாங்கிப் போய்விடுவான். 'தூணைத்தான் இவன்' என நினைத்து இளங்கோ மற்போர் புரியத் தொடங்கி உண்மை உணர்ந்து வருந்தினான். இவ்வாறே அலைக்கழித்து இளங்கோ பாராதபடி இடம் விட்டு இடம் பெயர்ந்து முடிவில் தப்பியே ஓடி விட்டான். இத்தனையும் அவன் கற்ற களவு நூற் கல்வியின் பயன் ஆகும். 'அக்கல்வியால் பெயர்ந்த கள்வனைக் கண்டவுடன் காட்டும்' என்று ஊர் காப்பாளரையே முடிவில் பொற்கொல்லன் கேட்கின்றான். அவர்கள்தாம் கண்டு பிடித்துக் காட்டவேண்டியவர்கள்.

## V a.

தான் கூறிவந்த கள்வர்கள் வரிசையில் கோவலனையும் உட்படுத்திக் கொண்டு 'இவர்க்குண்டோ உலகத்தில் ஒப்போர்' என்று அண்மைச் சுட்டில் பேசுகின்றான் கொல்லன். நேரே

கோவலனைக் கள்வன் என்று கூறி அவர்கள் கூற்றினை நேரே மறுப்பது அழகாகாது என இந்த முறையைக் கையாளுகின்றான். 'ஈங்கு இவர்க்கு' என்று இவன் பேசும் திறத்தை அரும்பத உரையாசிரியர் 'இவர்க்கு என்றான் இவனையும் கள்ளனாக்கி' என்று விளக்கம் கூறுகின்றார்.

b.

இவ்வியத்தகு கூற்றைக் கண்டும் கேட்டும் ஊர் காப்பாள ரில் முதியோர் ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவர்களில் இளை யவன் ஒருவனது மனம் இப்பேச்சாலும் காட்சியாலும் ஒரு சிறிது மாறியது. கொல்லன் கூறியது போன்ற அனுபவம் கள்வரைப் பிடிக்கத் தெரியும் ஊர் காப்பாளர் ஒவ்வொருவருக் கும் எழக் கூடிய ஒன்றுதானே? அதனால் அந்த இளையவன், தனக்கு எழுந்த அனுபவத்தை ஊர் காப்பாளர்க்குக் கூறத் தொடங்குகின்றான். கதை கூறும் சூழ் நிலை உருவானால் ஒருவர்க்கு ஒருவர் கதை சொல்லத் தொடங்குவர். தனக்குத் தோன்றியது ஒன்று தான் நேரிற் கண்டது ஒன்றானால் அதுவும் கேட்ட கதைக்கு ஒத்ததானால் ஒருவன் அதனைக் கூறப்புகுவது இயல்புதானே? அந்த இளையவன் இளைத்தவனல்ல. தோலா வேல் ஒன்று ஏந்தி உள்ளான். வீரர் மேல் அன்றி அந்த வேலை எறியாத இயல்பினை உடையவன் அவன். ஆகையால் அவன் கூறுவதை நம்பத்தான் வேண்டும். 'நிலத்தே அகழ்கின்ற கரடி போன்றவன். இருட்டில் தான் இருப்பது பிறர்க்குத் தெரியாதபடி, கறுப்புத் துணி அணிந் தவன். இரையை விரும்பிச் செல்லும் கடும் புலிபோல, பொருள் களைத் திருடச் செல்லும் வேட்கை உடையவன். காலமோ மழைக்காலம்; அதுவும் இரவின் நடுப்பகுதி: எங்கும் ஒரே நள்ளிருள். இத்தகைய மயக்க நிலையில் ஊர் எல்லாம் உறங்கி விட்டது. அப்போது இத்தகைய கள்வன் தோன்றினான். அவனைக் கண்டதும் என் கைவாளை உருவினேன். அவன் சடக் கென என் கைவாளை வாங்கிக் கொண்டான். நான் சுற்றும் முற்றும் எங்கும் பார்த்தேன்; அவனைக் காணேன். இப்படி எனக்கு நிகழ்ந்தது. ஆதலின் இந்தக் கள்வர்களுடைய செய் கையை யாரும் அறிய முடியாது. கள்வன், கள்வன் போல

இருக்கவேண்டும் என்பதில்லை. எனவே கையில் அகப்பட்ட இவனை விட்டு விடுவோமானால் வேந்தன் நம்மைத் தண்டிப் பான். எனவே பெரும் படைக்கலங்களை உடைய பெரியவர் களாகிய நீங்கள் படைக்கலங்களை நம்பிப் பயனில்லை. அவை நம்மைத் தண்டிக்கின்ற படைக்கலங்களாக மாறலாம். எனவே இந்த நிலைமையில் செய்யத்தக்கது இது எனத் துணிந்து கூறுங் கள்' என்று தன் அனுபவத்தைக் கூறி முடிக்கின்றான்.

c

அறிவாராய்ச்சியின் முடிவு விரைவில் வெளிவரவில்லை. அவர்கள் கோவலனைக் கள்வன் என முடிவு செய்யவில்லை. ஆனால் பொற்கொல்லன் நாடகம் ஒருவாறு பலித்தது. 'மருந் திற் பட்டீராயின் யாவரும் பெரும் பெயர் மன்னனில் பெரு நவைப்பட்டீர்' என்று அவன் அச்சத்தை இவர்கள் உள்ளத்தே ஊட்ட நினைத்தபடியே இந்த இளைஞன் மனத்தில் அச்சம் மூண் டெழுந்தது. கள்வர்கள் கள்ளங் கபடம் அற்றவர்கள் போல் பிறரை மயங்க வைப்பார்கள் என்று அவன் கூற விரும்பிய தையும் இந்த இளைஞன் நம்பிவிட்டான். ஆனால் எல்லோரும் இந்த முடிவுக்கு வந்தபாடில்லை. எனவே கோவலனது ஒழுக்க நிலை அவன் முகத்திலும் விளங்கியதைக் கண்ட பிறர், எளிதில் அவனைக் கள்வன் என எண்ண இடங்கொடுக்கவில்லை.

d

இந்த நிலையில் ஒருவேளை கோவலன் கொலையுண்ணாது தப்புவானோ என்று கூட நம் மனம் எதிர்பாராத நிலையில் எதிர்பார்க்கின்றது. ஆனால் எதிர்பாராத வகையில் ஒன்று நிகழ்கிறது. இவ்வாறு பேசிக் கொண்டிருப்பதைப் பொறுக்க முடியவில்லை ஒருவனாலே. அவன் ஊர்க்காப்பாளரில் ஒருவன். கட்குடித்துக் களிப்பதே அவன் இயல்பு. களிமயக்கத்தில் வேறு ஒன்றையும் கல்லானாகி வளர்ந்தவன். ஆதலின் நல்லது கெட்டது என ஆராயும் ஆராய்ச்சி மனப்பான்மை அவனிடம் இல்லை. காலத்தை இவ்வாறு இவர்கள் போலப் பேசியோ ஆராய்ந்தோ போக்கப் பொறுக்கமுடியாமல் ஓடிப்போய் தன் னுடைய வாளை விசினான். அது கோவலன்மேல் பட்டு அவனைக் குறுக்காகக் துணித்தது.

e

வெட்டிலிருந்து குருதி பொங்கியது; தரை எல்லாம் பரந்தது; இரத்தக் களம் ஆன நிலையில் பூமாதேவியே பெருந்துயர் உற்ருள் என்பது போலத் தோன்றுகிறது. கோவலன் வீழ்ந்தான். ஆனல் அந்த வீழ்ச்சி பாண்டியனது செங்கோல் வளைந்து வீழ்ந்த காட்சி போல் தோன்றியது. கோவலனது பண்டைய ஊழ்வினை இவ்வாறு உருக்கொண்டு, இவ்வாறு கோவலனை விழச்செய்தது.

## VI

கோவலன் இந்த நிலையை எதிர்பார்த்திருக்க மாட்டான். ஊர்காப்பாளரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். கொல்லன் எதிர்பார்த்திருக்க மாட்டான். இருந்தாலும் ஏதோ ஒருவகையால் தன் எண்ணம் பலித்ததே என்று அவன் ஆறுதல் அடைந்திருக்கலாம்.

கோவலன் வீழ்ச்சியை எவ்வளவு பெரிய வீழ்ச்சியாகப் புலவர் உருவாக்கிவிட்டார் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். கோவலன் உற்ருரைப் பிரிந்தான்; பெற்ருேரைப் பிரிந்தான்; உயிர் என எண்ணிய மாதவியைப் பிரிந்தான்; தன் குல தெய்வத்தின் பெயரை இட்டு வழங்கிய மணிமேகலையைப் பிரிந்தான்; தன் நாடு துறந்தான்; வேற்று நாட்டில் புகுந்தான்; அந்நாட்டின் குடிமகன் அவன் அல்லன்; எனவே அவனுக்கு என ஓர் உரிமை இல்லை; அங்கேயும் தான் அறிந்த கவுந்தியைப் பிரிகின்ருன்; மாடலனைப் பிரிகின்ருன்; இடைச்சியிடம் அடைக்கலம் புகுகின்ருன்; அவர்களும் பிரிகின்ருர்கள்; கண்ணகியை அணைத்து நிற்கின்ருன்; அவளையும் பிரிகின்ருன் – பழமையை நினைப்பூட்டச் சிலம்பு ஒன்றே அவன் கையில் உள்ளது. அதனையும் ஊர் காப்பாளர்க்குக் காட்டக் கொல்லன்கையில் தருகின்ருன். எனவே, தன்னந்தனியனுக நிற்கின்ருன். அப்போதேனும் மாற்ருர் வாளால் சாகின்ருனு? 'தவருன தண்டனை' என்று நாம் கூற ஊர்காப்பாளர் கையிலேனும் சாகின்ருனு? இல்லை! இல்லை! கட்குடியில் மயங்கிய ஒருவன் வீசிய வாள் வீச்சுக்கு இரையாகின்ருன். என்ன இழிவான இறுதி! துயரச்சாவு என்று கூற முடியுமா? கட் குடியனது வெறியால் எழுந்த சாவு இது.

அந்த வாளேனும் முன் பின்னே கொலேயிற் பழகியவாளா? இல்லே. 'அது' வெள்வாள்; மாற்ருரை எறிந்து குருதிக்கறை காட்டாத வாள்' என்று உரை எழுதுகிருர் அடியார்க்கு நல்லார். இவ்வாறு ஓவென வாழ்ந்தவன் – எல்லோரும் பாராட்ட வாழ்ந்தவன் – இவ்வாறு கல்லாக் களி மகனது வெள்வாளால் வீழ்கிருன். இந்த வீழ்ச்சியிலும் பிறிதொரு வீழ்ச்சியை எங்கே காணமுடியும்!

இவ்வாறு கொலேக்களக்காதையை நான்கு காட்சிகள் கொண்ட ஓரங்க நாடகமாகக் காணலாம். அப்போதுதான் அக்காதையின் அமைப்பு நன்ருக விளங்கும். கண்ணகியின் மனப்போராட்டம், கோவலனது உள்ளப் போராட்டம்-இவை இங்கேதான் வெளியாகின்றன. ஊழ்வினே, சமுதாயச் சூழ்நிலேயாக உருக்கொண்டு வருவதனேயும், பாண்டிய மன்னவனது கொலு மண்டபத்திலேயே காண்கிருேம். மாதர் கோலத்துடன் வல்லிருளில் புக முடியும் இயல்பினேயும் உணர்கின்ருேம். இனி இந்தக் காதையில்தான் பொற்கொல்லன் என்னும் பாத்திரத்தின் முழுப் படைப்பினேயும் காணமுடிகிறது. இவ்வாறு மிகச் சுருங்கிய இடத்தில் இப்பாத்திரப் படைப்பு நிகழவேண்டுதலின் அவன் பேச்சுத் திறத்தாலும், சூழ்ச்சியின் ஆழத்தாலும், வாய்ப்பினேப் பயன்படுத்திக் கொண்டு ஓங்கும் உள்ளத்தாலும், அவன் நடிப்புத் திறத்தாலும், அவன் எதிரே பலரும் ஏமாந்து போகின்ற நிலேயாலும், அவனுடைய பாத்திரத்தின் ஆழத்தையும் அகலத்தையும் திறம்பட விளக்கிவிடுகின்ருர் ஆசிரியர். கோவலனது வீழ்ச்சியின் ஆழத்தையும் கதையை அமைத்துப் போகும் வகையில் காட்டிவிடுகின்ருர். கதையை முன்னர் அறிந்த நாமும் எதிர்பாராது நிகழுமோ என்று எண்ணும் வகையில் விறுவிறுப்போடு கதையை நடத்திச் செல்கின்ருர். இக்கதை தனி ஒரு கதையாகிப் பொருள் அற்றது ஆகாமல் உலகத்தைப் பற்றிய வாழ்க்கையின் ஆழத்தை உணர்த்துவதாகக் காட்ட வந்தவர் சகுனமும் பிறவும் இந்த ஆழத்தை உணர்த்துவதைக் காட்டுவதாகக் குறிப்பதோடு மண்ணக மடந்தை வான் துயர் கூற, காவலன் செங்கோல் வளேஇய வீழ்ந்தனன். கோவலன் பண்டை ஊழ்வினே உருத்தென்' என்ற உண்மையையும் நேரே விளக்கிவிடுகின்ருர்.

## VIII

இக்காதையின் பின்னே ஒரு நேரிசை வெண்பா உள்ளது. சிலப்பதிகாரத்தில் சில காதைகளின் பின்னே இத்தகைய வெண் பாக்கள் வரக் காண்கிறோம். 'இந்த வெண்பாக்கள் இளங்கோ அடிகள் செய்தனவா, அல்லவா' என்ற ஆராய்ச்சி இக்காலத் தில் நிகழ்கின்றது. யார் இயற்றியிருந்தாலும் கதையில்வரும் சுவையுள்ள பகுதியைத் திறம்பட விளக்குவனவாக இவை அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை. இளங்கோவடிகள் பாண்டியன் செங்கோல் வளைந்ததைப் பலவாறு கூறுவர்; பின்னே அவன் தன் உயிரைக் கொடுத்து அந்த வளைவினை நீக்கினான் என்றும் கூறுவர். இத்தக் கொலைக் களக்காதையில் முடிவாக நம் உள்ளத்தே தோன்றுவது என்ன? எல்லோரும் போற்றும் கோவலன் பொச்சாப்பினால் ஒரு சிலவற்றை மறந் தாலும், அதற்காக அவன் தன்னைத் தானே பழித்துக்கொண் டாலும், நாம் எல்லாம் போற்றும் பாத்திரமாகவே காட்சி அளிக்கின்றான். அத்தகையவன் எதிர்பாராதவகையில் சாகின்றான். அவன் போற்றிய பாண்டி நாட்டுச் செங்கோலே வளைந்து கொடுக்கும் வகையில் சாகின்றான். நம் உள்ளம் உருகுகிறது; நல்லோர் எல்லாம் நாணும் இக்கொடுமைக்கு நம் மனம் நடுங்குகிறது. இது ஏன் என நம் மனம் கேட் கின்றது? இதற்குத் தான் அறிந்த வகையில் விடை கூறுவது போல இந்த வெண்பாப்பாடிச் செல்கிறது. முன் செய்த வினை யால் எதிர்பாராதவை, இந்த உலகில் நிகழலாம். ஆனால் அது பற்றி மனம் சோர்ந்து பயன் இல்லை. பழவினை இவ்வாறு முனைமாதலின் நம் பழவினை உலகினை வாட்டாதபடி நல்லறமே செய்து வருவோமாக. இதனைத் தடுப்பார் இல்லையே' என நம்மை அறத்தில் ஊக்குகின்றது; உலகத்தை விளக்குகிறது.

'நண்ணும் இருவினையும் நண்ணுமின் நல்லறமே
கண்ணகி தன்கேள்வன் காரணத்தான் – மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை."

---

# திருமுகப் பாடல்



திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், M. A.,



தவம்வளரத் திருவளரும் திருப்பனசை
மடாலயத்துத் தலைவ னுக்குச்
சிவம்வளர அறம்செய்யும் அருணந்திப்
பெருமுனிவன் சிறப்புப் பேணி
நவம்வளர இளவலெனத் தேர்ந்தெடுத்துப்
பயிற்றுகின்ற ஞானச் செல்வ,
பவம்வளரா வகையறிந்த முத்துக்கு
மாரனெனும் பண்பு சான்றோய். 1

நினக்கென்றன் பணிவியம்பி எழுதுகின்ற
கடிதமிதை நேயத் தோடு
மனக்கொள்க; சுசிந்தையினில் சித்திரையில்
நடக்கின்ற மாவி ழாவில்
கனத்தகுதி யுடையதமிழ்த் திருமுறையை
ஓதுகின்ற கல்வி யாளர்
இனத்திலெடும் தேவார கோஷ்டிநடத்
தும்பெருமை இனிதிற் கேட்டேன். 2

எழுதாத மறைப்பொருளை எழுதும்வகை
எளிதாக்கி யாரும் கொண்டாற்
பழுதாகா வகையில்இசைத் தமிழாக
அருள்செய்தார் பண்டை நல்லோர்

அழுதாரும் கரையேற வைத்தகவு
ணியக்கன்றை ஆதி யாகத்
தொழுதாரும் வணங்குகின்ற நால்வர்தமி
ழமுதமெனச் சொல்ல லாமே. 3

வடமறையைத் தானென்றும் சொன்னாலும்
தமிழ்மறையின் வண்ணம் கேட்டுத்
திடமுடைய மெய்ஞ்ஞானத் திருவினருக்
கருள்புரிந்த சிவனைப் போற்றும்
இடமுடைய நெஞ்சுடையார் திருமுறையின்
இசைகேட்டே இன்பம் பூப்ப
மடம்உடைய யாவர்க்கும் நலம்பெருகச்
செய்சைவ வளர்ச்சி ஈதே. 4

இத்தகைய சிவப்பணிகள் பலசெய்யத்
தமிழுலகம் ஏற்றம் எய்தும்;
சுத்தசிவன் நற்கருணை யாலெவர்பா
லுஞ்சாந்தம் துன்னும்; அன்பு
வைத்தமனத் தினராகி மன்பதைகள்
வாழும்;இந்த மாட்சி ஓங்க
உத்தமத்தொண் டைப்புரியும் திருப்பனந்தாள்
காசிமடம் ஓங்கி வாழி! 5



# திருவாசகம் — தேனிப்பார்

திரு. மு. அருணசலம் அவர்கள்,

கோயில்மூத்த திருப்பதிகத்தின் 9ஆம் பாசுரம் பின்வருவது :—

"சிரிப்பார், களிப்பார், தேனிப்பார்
திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார், கேட்பார், மெச்சுவார்,
வெவ்வே றிருந்துன் திருநாமம்
தரிப்பார், பொன்னம் பலத்தாடும்
தலைவா என்பார், அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனே?
நம்பி! இனித்தான் நல்காயே"

இதனுள் "தேனிப்பார்" என்ற சொல்லுக்கு உரைகாரர் பலர் பலவாருகப் பொருள் செய்திருக்கிறார்கள்.

1867–இல் பன்னிரு திருமுறைத் திரட்டுக் குறிப்புரை எழுதிய கோளங்கிபுரம் சிவ. அருணகிரி முதலியார், 'தேனிப்பார் – தியானிப்பார்' என்று பொருள்எழுதினர். அதையே பின்பற்றி நா. கதிரைவேற் பிள்ளை (1915), கா. சுப்பிரமணிய பிள்ளை (1930), அ. சோமசுந்தரம் செட்டியார், தருமபுரம் பதிப்பாளர் போன்றோர் அனைவரும் தியானிப்பார் என்றே பொருள் எழுதி விட்டார்கள். இப்பொருட் பொருத்தம் ஆராய்வதற்குரியது.

சீகாழித் தாண்டவராயர் உரையில், "ஆண்டவனே! ஓர் விண்ணப்பம்! தேவரீர் திருவருளடிமை இன்பம் பர முத்தித் திருச்சபையிலே, சீரடியார்கள் சிலர் உள்குவாருள்கின்றெல்லாம் உடனிருந்த தறிதியென வெள்கி விலாவறச் சிரிப்பார்கள்; சிலர்

*மேலே காணும் கட்டுரை சித்தாந்தம் பத்திரிகையில் வெளியாகியது. ஆசிரியர் திரு. மு. அருணசலம் அவர்களின் இசைவு பெற்று வெளியிடப் பெற்றுள்ளது.*

சிவானந்த போதத்தால் இறுமாந்து பல்கணத் தெண்ணப்பட்டுக் களிப்புறுவார்கள் சிலர்; திருவடி ஞானத் திரிவித கரணமும் இன்ப முற்றுக் கன்னலும் சுவையும் போல் அத்துவிதக் காட்சி யுறுவார்கள்'' என்று காணப்படுகிறது. இதன் பதிப்பாசிரியர் தரும் அடிக்குறிப்பு: "தேனிப்பார் – தியானிப்பார்'' என்று காணப்படுகிறது. இங்கு, தேனிப்பார் என்பதன் அனுபூதிப் பொருள்: "கன்னலும், சுவையுமொத்து அத்துவிதக் காட்சியுறு வார்கள்'' என்பது. அனுபூதிநமக்கு அப்பாற்பட்டது. உலகவிவ காரம் என்ற அளவிலும், பாசுர இலக்கியம் என்ற அளவிலும் நமக்கு இது பொருந்தவில்லை. விளங்குவதாயும் இல்லை. தியா னிப்பார் என்ற பதிப்பாளர் குறிப்பு, முன்பு குறிப்பிட்ட உரைகளைப் பார்த்து எழுதியது.

இனி, சுந்தர மாணிக்க யோகீசுவரர் (1929) கூறும் உரை பின் வருவது;–

"மனதில் மகிழ்ச்சியடைவார்கள்; இன்பத்தையும் முதலில் கொடுப்பவை சூரிய சந்திர கலைகள் அல்லது இரு திருவடிகளி லிருந்து வெளிப்படும் வெண்மையும், சிவப்புமாகிய நாத விந்துக் கலைகள். இவைகளை ஒன்றுபடுத்துவதனல் வெளிப் படும் கலைகளை வெளிப்படுத்துவார்கள் என்பதையே 'தேனிப்பார் என்கிறர்.'' இவ்வுரைக் குறிப்பும் நமக்கு அப்பாற்பட்டது என்பது உண்மை.

இந்த நிலையில் நாம் மாணிக்கவாசகர் பாடிய பாசுரம் கூறும் நிலையை ஆராய்வோம். "ஆண்டவனே எனக்கு நின்னருளை நல்குவாயாக. நினது புகழை யோதித் தம்வசம் இழந்து பரவசப் பட்டிருக்கும் நின்னடியார் கூட்டத்தில் பிறர் ஏளனத்துக் குரியவனுக நான் இருத்தல் அழகோ?'' என்பது இதன் கருத்து.

அடியார் எவ்வாறு இருக்கிருர்கள் என்பதையும் இங்கு பலபடக் கூறுகிருர். "சிரிப்பார், களிப்பார், தேனிப்பார், உன் திருவார்த்தை விரிப்பார், கேட்பார், மெச்சுவார், உன் திரு நாமம் தரிப்பார், தலைவா என்பார்''– கூடும்போது விளையும் மகிழ்ச்சி முகத்தில் வெளிப்பட, சிரிக்கிருர்கள், அகத்தில் அம் மகிழ்ச்சி மிகக் களிக்கிருர்கள், திருவார்த்தையை விரித்துப்

பேசுகிறுர்கள், கேட்கிறுர்கள்; புகழ்கிறுர்கள், உன்பெயரைத் தரிக்கிறுர்கள், தலைவா என்று புகழ்கிறுர்கள்.

இவ்வாறு வந்துள்ள செயல்களை நாம் காணும் போது இவையாவும் புறமுகச் செயல்களாக இருக்கக் காண்கிறோம். எட்டுச் செயல்கள் இங்குக் கூறப்பட்டுள்ளன. யாவும் வெளி முகமானவை. இவற்றுள் ஒன்ருன தேனித்தல் மட்டும் உள் முகமான தியானித்தல் என்பது, தொடர்ந்த கருத்தின் ஒருமைக்கு முரணுனது.

தேனித்தல் எனின் தேன் என்ன இனிமையை நுகர்கிறுர்கள், சுவைக்கிறுர்கள் என்று புறமுகமாகப் பொருளுரைத்தல் ஒன்றே சிறப்புடையது. பாமர மக்கள் மொழியில் சொன்னுல், "நாவில் சப்புக் கொட்டுகிறுர்கள்."

"இன்புறுவார்கள்..........." மேலும் அவற்றை எண்ணி எண்ணிச் சுவைப்பார் ஆகலின், "தேனிப்பார்" என்பது நவநீத கிருஷ்ண பாரதியார் உரை. "உள்ளத்தினுள் தேன் போல் சுவைப்பார். உள்ளத்தில் எண்ணி மகிழ்வார்" என்பது மர்ரே கம்பெனியார் பதிப்பின் குறிப்பு.

இதே கருத்தோடு தேனித்தல் என்ற சொல் பெரியாழ்வார் திருமொழி நாலாம் பத்து, ஆறும் பதிகம், முதற்பாசுரத்தில் வருகிறது.

"காசும் கறையுடைக் கூறைக்கும் அங்கோர் கற்றைக்கும்
ஆசையினுல் அங்கவத்தப் பேரிடும் மாதர்காள்
கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித் திருமினோ,
நாயகன் நாரயணன் தம் அன்னை நரகம் புகாள்."

இங்கு 'தேனித்து இருமின்' என்ற தொடரின் பொருள் 'மகிழ்ந்து இருமின்' என்றவாறு.

இது காறும் கூறியவற்ருல், தியானிப்பார் என்ற பொருள் பாசுரத்தின் கருத்தொருமைக்கு முரணுனது என்றும், இறுதியில் காட்டிய இருபதிப்புக்களில் கூறியுள்ளது போல, சுவைத்து மகிழ்வார் என்பதே, தேனிப்பார் என்ற சொல்லின் திருத்தமான பொருள் என்பதும் தெளிவாகும்.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 14, இதழ் 4-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

30 தெருளுமாதெருளமாட்டேன்றீவினைச்சுற்றமென்னும்
பொருளுளேயழுந்திநாளும்போவதோர்நெறியுங்காணேன்
இருளுமாமணிகண்டாநின்னிணையடியிரண்டுங்காண்பான்
அருளுமாறருளவேண்டுமதிகைவீரட்டனாரே.

### THE SOUL's BITTER CRY

30 Daily I'm sunk in worldly sin;
Naught know I as I ought to know;
Absorbed in vice as 'twere my kin,
I see no path in which to go,
O Thou with throat one darkling gem,
Gracious, such grace to me accord,
That I may see Thy beauteous feet,
Athihai Virattanam's Lord.

---

# வீராணத்தேரி

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்,
வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.



சிதம்பரந்தாலுகாவில் வீராணத்தேரி என்று வழங்கப் பெறும் வீரநாராயணன் ஏரியினது வடிகால் வாய்க்காலின் பெயர்.

வீராணத்தேரி சிதம்பரந்தாலுகாவிற்கு உயிர் நாடி போன்றது. ஏனெனில் இந்த ஏரியின் பாய்ச்சலால் சிதம்பரந் தாலுகாவில் பெரும் பகுதி நிலங்கள் சாகுபடி செய்யப்படு கின்றன.

அதுமாத்திரமல்லாமல் இந்த ஏரியின் நீரை, கூடலூர்த் தாலுகாவிலுள்ள நிலங்களுக்கும் சாகுபடி செய்யப் பயன்படுத் தப் படுகிறது. இந்த ஏரியை வெட்டினவன் வீரநாராயணன் என்னும் வேறு பெயரையுடைய முதற்பராந்தக சோழன் ஆவன். இவன் கி. பி. 907 முதல் கி. பி. 955 முடிய நாற்பத் தெட்டு ஆண்டுகள் ஆண்டவன். தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தவனும் இம் மன்னனேயாவன்.

இந்த ஏரிக்குக் கொள்ளிடப் பேராற்றிலிருந்து நீர் வரும் ஆற்றுக்கு மதுராந்தகன் வடவாறு என்று பெயர். இச்செய்தி கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயில் கல்வெட்டால் அறியக் கிடக்கின்றது. (SII. Vol. IV Nos.522, 523.) இந்த வீராணத்து ஏரிக்கு வடிகால் வாய்க்கால் ஒன்று உள்ளது. அது சிதம்பரந் தாலுகா லால்பேட்டை என்னும் ஊருக்கு அருகில் வீராணத்து ஏரியிலிருந்து தொடங்கித் திருநாரையூர்க்கு வட மேற்கில்

வெள்ளியங்கால் என்றும், குமராட்சிக்கு வடமேற்கில் கான் சாஹிப் வாய்க்கால் என்றும், சிதம்பரத்துக்கு அருகில் பால மான் என்றும், சிதம்பரம் புகை வண்டி நிலையத்துக்கு வட பாலுள்ள கெருடரிலிருந்து ப ர ங் கி ப் பே ட் டை வாய்க்கால் (Portonovo Canal) என்றும் பல பெயர்களைப் பெற்று, பரங் கிப் பேட்டைக்கு அருகில் வெள்ளாற்றில் விழுகிறது. இந்த வாய்க்காலின் பெயர் காஞ்சி வாயில் உடையான் வாய்க்கால் என்பதாகும். காஞ்சி வாயில் என்பது மாயூரந்தாலுகாவில் உள்ள குற்ருலத்துக்குத் தெற்கே சுமார் ஆறு மைல் தூரத்தி லுள்ள ஊரின் பெயர். அது காவிரியாற்றிற்கும், அரிசிலாற்றுக் கும் இடையில் உள்ள உய்யக்கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாட்டைச் சேர்ந்தது. அவ்வூரில் உதய திவாகரன் தில்லை யாளியான இராஜராஜ சோழ மூவேந்த வேளான் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் கி. பி. 985 முதல் 1014 முடிய சோழ மண்டலத்தை ஆண்ட முதலாம் இராசராச சோழனது அரசியல் அதிகாரியாக விளங்கியவன். உதய திவாகரன் தில்லையாளி என்பது இவனது இயற்பெயர். இராஜராஜ சோழ மூவேந்த வேளான் என்பது இவனுக்கு முதலாம் இராசராச சோழனுல் இவனது அரசியல் ஊழியத்தைப் பாராட்டிக் கொடுக் கப்பெற்ற பட்டப் பெயர். இவன் தஞ்சை இராசராசசேச்சரத் தில் கிருதார்ச்சனருடைய திருமேனியை எழுந்தருளுவித்துள் ளான். ஹாலண்டு தேசத்தில் லெய்டன்மா நகரத்துக் கண் காட்சிச் சாலையில் வைக்கப்பெற்றிருக்கும் லெய்டன் பெரிய செப்பேடுகளிலும் (The large Leyden plates) இவன் குறிக் கப்பெற்றுள்ளான்.

இந்தக் காஞ்சிவாயில் என்னும் ஊர் திருவிடை மருதில், மயிலாப்பில் என வழங்கப்பெற்ற ஊர்கள் திருவிடைமருதூர், மயிலாப்பூர் என வழங்கப்பெறுவது போல, இக்காலம் காஞ்சி வாய்என்று வழங்கப்பெற்று வருகின்றது. இந்தக் காஞ்சிவாயில் உடையானுல்வெட்டப் பெற்றமையின் மக்கள்இந்தவாய்க்காலுக் குக் காஞ்சிவாயில் உடையான் வாய்க்கால் என்று ஊரோடு சார்த்திய பெயரால், பெயர் வைத்துள்ளனர். சிதம்பரந்தாலுகா குமராட்சிக்கு அண்மையில் உள்ள மேலப்பருத்திக்குடி என்னும்

ஊருக்கு அருகில் காஞ்சிவாய் என்னும் பெயரோடு ஓர் ஊர் இருக்கின்றது. அதுவும் இவன் பெயரால் வைக்கப்பெற்ற ஊராகும். இவைகளை எல்லாம் கூர்ந்து நோக்கும்போது, இவன் குமராட்சிக்கு அண்மையிலுள்ள வெண்ணையூர் (வெண்ணெய் ஊர்) என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்ட வெண்ணையூர் நாட்டுக்கு அதிகாரியாக இருந்திருக்க வேண்டுமென்றும், அக்காலத்தில் இவ்வடிவாய்க்கால் வெட்டப் பெற்றிருக்க வேண்டுமென்றும் புலப்படுகின்றது. இந்த வெண்ணையூர் நாட்டில் அடங்கிய ஊர்களுள் சிலவாக, மாதுளவேளூர், பாப்பார்குடி, சோதியக்குடி, பெருங்கண்பூர், வெள்ளூர், இளங்கண்பூர் முதலான ஊர்கள் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றன. இவைகளுள் இளங்கண்பூர் என்பது இக்காலம் இளங்கம்பூர் என்று வழங்கப் பெறுகின்றது.

இங்ஙனம் காஞ்சிவாயில் உடையான் வாய்க்கால் எனப் பெயர் பெற்ற இவ்வாய்க்கால், கான்சாஹிப் வாய்க்கால் என்று மாறி, அது கான்சாஹிப் என்பவரால் வெட்டப்பெற்றது என்றும், அதுவே காஞ்ச வாய்க்கால் ஆயிற்று என்றும் மக்களால் கொள்ளப்பெற்று வருகின்றது. சென்னையில் உள்ள ஹாமில்டன் வராவதி, ஹாம்டன் வராவதி என்று ஆகிப், பின் அம்பட்டன் வராவதி என்று அகியதுபோல, இந்தக் காஞ்சிவாயில் உடையான் வாய்க்கால், கான்சாஹிப் வாய்க்கால், ஆகிப்பின் காஞ்ச வாய்க்கால் ஆயிற்று. எனவே இந்த வீராணத்து ஏரியின் வடிகால் வாய்க்காலின் பெயர் காஞ்சிவாயில் உடையான் வாய்க்கால் என்பதாகும். இந்த வாய்க்காலை வெட்டியவனின் முழுப்பெயர் உய்யக் கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாட்டுக் காஞ்சிவாயில் உடையான், உதயதிவாகரன் தில்லையாளியான இராஜராஜசோழ முவேந்த வேளான் என்பதாகும்.



உ

மருந்தீஸ்வரர் துணை

# சோபகிருது புத்தாண்டு வாழ்த்து

மலர்தலை யுலகினில் மாண்புற் றொளிரும்
அலகிலாச் சீர்சால் பரதநன் னாட்டில்
ஆறுபத் தென்ன அறைதரும் ஆண்டில்
வீறுபெற் றவிரும் சோப கிருதுவினில்
நல்லோர் பெருகவும் அல்லோர் அருகவும்
அறமலிந் தோங்கவும் மறம்நலிந் திரியவும்
பிணிமூப் பொடுமுடி பெயர் கெட்டொழியவும்
சீரும் செல்வமும் நேர்மையும் திகழவும்
பொல்லாப் பகைவர் நில்லா தகலவும்
கற்பும் ஆண்மையும் பொற்புற விளங்கவும்
கைத்தொழில் பெருகவும் மெய்ச்செயல் மிளிரவும்
மாதமும் மாரி மடிவின்றிப் பொழியவும்
நன்மைகள் பெருகவும் தீமைகள் தீயவும்
சாதிமத பேதம் தலைமறைந் தேகவும்
ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
என்றே எவரும் நன்றே உணரவும்
ஆத்திகம் வளரவும் நாத்திகம் தளரவும்
எல்லோரும் இன்புற் றிதயம் களிப்பவும்
இளமையி லிறப்போர் தொகைமிகக் குறையவும்
கல்வித் துறைகள் கவின்பெற் றிலங்கவும்
யாதும் ஊரே யாவரும் கேளிர்
எனும்உளப் பான்மை எங்கும் திகழவும்
வீறுகால் பாரதம் வெற்றிபெற் றோங்கவும்
உமையொரு பாகன் உலகளித் தருள்வோன்
கமழ்மலர்ச் சேவடி யிணையே
அமைவுறப் போற்றுதும் அவனி வாழ்வுறவே.

திருவான்மியூர்,
14—4—1963.

இ. எஸ். வரதராஜய்யர்,
டாக்டர் ஐயர் நூல்நிலையம்.

திருலோக்கி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமி கோயிலில்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

# நீதிநெறி விளக்கம்

## உரைநடையும், ஆங்கில மொழிபெயர்ப்பும்*

பாலகவி வயிநாகரம்,

**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**

தேவகோட்டை.



[மலர் 14. இதழ் 4-ன் தொடர்ச்சி]

தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
சிறுவரை ஆயினும் மன்ற தமக்காங்
கிறுவரை இல்லை எனின்.

பின்னுளில் தமக்கு உறுதியாக சிறிய அளவிலாயினும் இறப்பு வராது என்று தெரிந்தால் தமது வன்மையையும் பெருமையையும் இழந்து இனிமையான உயிரை உடம்பிலே தங்கியிருக்கும்படி ஒருவர் பாதுகாப்பாராயினும் அவ்வாறு காக்கக் கடவர்.

### Life or Honour?

If there are people who are confident even for a moment that they would never confront death in future, then, let them save their sweet lives at the sacrifice of their honour and courage. 41

கலனழிந்த கற்புடைப் பெண்டிரும் ஐந்து
புலனெருங்கப் பொய்கடிந் தாரும்—கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரும் அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிச்சூ டினும்.

---

Translated by: Sri P. Mutharasu M. A. B., T., Lecturer in Tamil, Sri K. G. S. Arts College, Arulnandi Nagar Srivaikuntam.

உயிர்களோடு மாறுபடுகின்ற இயல்புடையவனாகிய கூற்றுவன், உமது உயிரைக் குடித்தே திருவேனென்று தும்பை மாலையை முடியிலே சூடி வந்தாலும், மங்கல நாணை இழந்து கைம்மை நோன்பு நோற்கின்ற கற்புடைப் பெண்களும், சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமுமாகிய ஐந்து புலன்களும், ஒன்று பட்டுத் தம் வழி நிற்கப் பொய்யை ஒழித்து வாழுகின்ற துறவிகளும், போர்க்களத்தில் வலிமையோடு எதிர்க்கின்ற வீரர்களும் அச்சத்தை அடைய மாட்டார்கள்.

## Those who defy death.

Virtuous widows who have shunned their ornaments, sages who have renounced the false pleasures of the world having controlled their senses and valiant heroes who stand firm in the bloody field of battle will never fear the god of Death, even though he comes purposely equipped for waging war with them.

42

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.

அறிவில்லாதவர்களாகிய வீணர்கள் புழுக்கள் நெளியப் பெற்றுப் புண்கள் அழுகிக் காததூரம் நாறுகின்ற மிகுந்த புலால் நாற்றத்தை உடையதாயினும் தமது உடம்பு விட்டு இறந்து போதலை நினைந்து நினைந்து பெரு மூச்சு விடுவார்கள். உடம்பு பெற்றதாற் பெறத்தக்கதாகிய உண்மைப்பயனைப் பெற்ற சான்றோர்கள் சுமையாகிய இவ்வுடலை இங்கே விட்டுச் செல்லுவதற்கு ஒரு போதும் மனம் சுளிக்க மாட்டார்கள்.

## The right users of body.

Even when the body is festered with sores full of crawling worms, and its disgustful stench is smelt at a

distance of ten miles, the fools will deeply sigh and groan at the very thought of death; but those who have correctly assessed the value of their body would not shrink to cast off their mortal coil. 43

இகழின் இகழ்ந்தாங் கிறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப—இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை.

இறைமகனாகிய அரசன் ஒரு பொருளை இகழ்ந்து பேசுவானானால் குடிமக்களும் அதனைஅவ்விடத்திலேயே இகழ்ந்தும் அவன் அதனை மீண்டும் புகழ்வானானால் உடனடியாகப் புகழ்ந்தும் அவர்கள் பேசுவார்கள். நீரின் வழிப் பட்டு நிற்பதாகிய தெப்பம் அதன் வழியே நிற்பதன்றி வேறு என்ன செய்யும்? அதுபோல வலிமையையுடைய மன்னனது கருத்துவழிப்பட்டு நிற்பதே மன்பதைகளின் இயல்பாகும்.

## The commoners.

The commoners act according to the whims and fancies cf the monarch by condemning when he condemns and by commending when he commends. What else can they do, as they are like the raft borne along the current? 44

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு முட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவுண்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு.

பாகர்கள், கதுப்பிலிருந்து ஒழுகுகின்ற மத நீரையுடைய யானையின் வயப்பட்டு நிற்பார்களோ! அது போல எந்த நிலையிலும் அமைச்சர்கள் அந்தச் சிறப்பை உடையவர்களாகவே இருப்பார்கள். அரசன் தவறான செயல்களில் தலைப்படும் வேளை

களில் அவனிடம் சென்று அவனது காதுகளில் சுடுசொற்களைச் சொல்லி இடித்து அறிவை விளக்கி அவன் சினந்தாலும் அதற்காக அஞ்சி அகலாது அறிவுரை கூறுவார்கள்.

### The duty of the Ministers.

True ministers never fail to approach the king to give him wise counsel by rousing him to the call of reason, even dauntless of incurring his anger. Does not the mahout continue to exercise control over the elephant even when it is frantic and violent? Such must be the ministers of a monarch. 45

(தொடரும்.)



# "சிவாகமங்கள்"

திரு. ம. வெ. மு. நாகராசக் குருக்கள் அவர்கள்,
குறுலயம்.

"முட்டையிலிருந்தும், வியர்வைபிலிருந்தும், வித்திலிருந்தும், கர்ப்பப்பையிலிருந்தும், தோன்றுவனவாகிய, நீர்வாழ்வன-தாவரம், ஊர்வன, பறவை, விலங்கு, மனிதர், தேவர் ஆகிய ஏழுவகைப் பிறவிகளில் மானுடப்பிறவி பெறுதல், சமுத்திரத்தைக் கையால் நீந்திக்கரையேறிய காரியத்தோடு ஒப்பாகும்" என்ற கருத்தைச் சிவஞான சித்தியார் என்ற சாத்திர நூல் எடுத்துக் கூறுகின்றது. இந்தமண்ணுலகில் வாழ்ந்துவரும் உயிர்ப் பிறவிகள் முழுவதும் உடலால் வேறுபட்டிருந்தாலும், இன்பம், துன்பம், ஆசை, ஆர்வம், அச்சம், பசி, உறக்கம் முதலிய உணர்வுகள் எல்லாப் பிறவிகளுக்கும் இயல்பாகவே அமைந்துள்ளன. எழுவகைப் பிறவிகளில் மக்கள் அடங்குவராயினும், இன்பதுன்பச் சுழற்சியினின்றும் வெளிப்பட்டுத் தோன்றும், தம் எண்ணங்களை-சொல்லிய சொற்களை எளிதில் மறவா வண்ணம், பதியவைத்துக் கொள்வதற்கு வாய்ப்பாகிய, மனம் என்னும் கருவி மனிதனுக்குச் சிறப்பாக அமைந்த தோடல்லாமல், மனத்திலெழும் கருத்துக்களை வெளியிட்டு உலகில் நிலை பெறச்செய்வதற்குப் போதுமான வாக்கு (வாய்) காயம் (உடல்) ஆகிய கருவிகளும் சிறப்பாக அமைந்திருப்பதாலேயே எப்பிறவியிலும் மனிதப்பிறவியே மிகச் சிறந்தது என்று கூறப்படுகின்றது.

மனிதனின் உயர்வுக்கும் தாழ்வுக்குமுள்ள காரணம் பலவற்றுள் எண்ணம், சொல், செயல், ஆகிய இம்மூன்றும் முக்கியமாவன. நினைவுகள் தோன்றும் இடம் மனம். சொல்லும் செயலும் மனத்திலெழும் நினைவுகளை அடிப்படையாகக்

கொண்டவை. மனித மனம் காற்றைவிட வேகமுடையது. காற்றுப்புகாத இடத்திலும், மனம் புகுந்து விடும். காணும் கண்களுக்குக் காட்டுவது மனம். மனத்தை அது சென்ற வழியே விட்டுவிடாமல் நல்ல நெறியிற் செலுத்துவதே அறிவு ஆகும். அறிவும், உயிரும், மலரும் மணமும் போல, நெருப்பும் சூடும்போல்-கதிரவனும் ஒளிக்கதிர்களும் போல் பிரிவு இல்லா தவை. உயிர் வேறு அறிவு வேறல்ல. சூரியன் தன் ஒளிக் கிர ணங்களால் உலக இருளைப் போக்கி உலகப் பொருள்களை நமக் குக் காட்டுவது போல, உயிர், உடல் முழுவதும் அறிவுபரவி அஞ்ஞானமாகிற மாயா இருளை நீக்கி மேலான தத்துவ ஞானம் தலை நின்று இறவாத இன்பத்தை வேண்டி நிற்கின்றது. உயிரும் அறிவும் அழிவற்றவை. நிலையானவை. படிகம் போன்று தூய் மையானவை. மனம் நிலையில்லாதது. அறிவின் துணைகொண்டு உலகப் பொருள்களைப் பார்ப்பது மனம். அறிவற்ற சடப் பொருள்களாலான உலகப் பொருள்கள் நிலைமாறிமாறி மயக்கத் தைத் தருவது போல மனம் ஒரு நிலையில் நிற்காமல் அடிக்கடி மாறிக்கொண்டே இருக்கும்.

"சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு."

என்னும் உலகப்பொதுமறை மொழிக்கு "மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது, அப்புலத்தின் நன்மை தீமைகளை யாராய்ந்து தியதனின் நீக்கி நல்லதனின்கட் செலுத்துவது அறிவு" என்றார் – அஃதுஉயிர்க் குணமாகலின்." என்றார் பரிமேலழகர் என்னும் உரையாசிரியர்.

மனம் என்னும் அகக்கருவி அறிவு ஒன்றினுக்கே ஆம்போது மனிதன் கண்ணாடிபோல் பரிசுத்தனாகவும், துயரமற்றவனாகவும், அன்பு-அருள் முதலிய நற் குணங்களையே வடிவமாகக் கொண்டும் விளங்குவான். மயக்கத்தைத் தருகின்ற உலகத் தோற்றங்களையே நிலைப்பென எண்ணி அறிவற்ற உலகியலுக்கு அறிவுத் தொடர்புள்ள மனம் அடிமையாகும்போது, ஆணவ அழுக்குப் படிந்தவனாகவும், பேராசை, பொறாமை, கோபம், அடக்கமற்றதன்மை, முதலிய தீக்குணங்களை மேற்கொண்ட

வனாக மனிதன் மாறிவிடுகின்றான். மனித அறிவை இயற்கை அறிவு - செயற்கை அறிவு, என இருவகையாகப் பிரிக்கலாம். முற்பிறவிகளில் பொருளனுபவங்களை நுகர்ந்து வரும்போது இறந்ததனால் விடுபட்ட அறிவு மறுபிறப்பிலும் தோன்றி வெளிப் படும். இது இயற்கை அறிவு. இதை,

........தலைவர் மொழிந்த ஆகமங்கள்
முந்தை அறிவின் தொடர்ச்சியினால்
முகைக்கு மலரின் வாசம்போல்
சிந்தை மலர உடன்மலரும்

என்று பெரியபுராணம் பகரும். மொட்டில் மறைந்துள்ள மணம், பூ மலர்ந்தவுடன் வெளிப்படுவதுபோல முற்பிறப்பில் பெற்ற அறிவு இப்பிறப்பிலும் தோன்றி வெளிப்படும் என்பது கருத்து. நல்லநூல்களைப் படிப்பதினால் வரும் அறிவுவளர்ச் சியைச் செயற்கை அறிவு எனலாம். "மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு" எனவரும் திருக்குறளுக்கு "இயற்கையாகிய நுண்ணறிவை செயற்கையாகிய நூலறிவோடு உடையராய" என்ற பொருளைக் கூறுகின்றது பரிமேலழகர் உரைநூல். இயற்கை நல்லறிவோடு செயற்கை நூலறிவும் பெற்ற பெரி யார்கள் மனத்தை நல்லநெறியிற் செலுத்தி, உலகம்-உடல்-உயிர்-கடவுள், முதலியவைகளைக் குறித்து ஆராய்ந்திருக்கின் றனர். அவ் வாராய்ச்சியின் பயனால் தோன்றிய சிறந்த கொள்கைகளெல்லாம் சமயங்களாயின. சமயம் - மார்க்கம், என்ற சொற்கள் ஒரே பொருளுடையன. ஆராய்ச்சியின் பய னால் அறிவுக் கருத்துக்கள் ஒன்றாகத் திரண்ட நிலையே சமய மென்பது. உயர்ந்த குறிக்கோளைக் கருத்திற் கொண்டு அறி வுடையோர் செல்லும் வழியே மார்க்கம் எனப்படும்.

சமயங்களெல்லாம் மக்களுட் சிறந்த புத்தர் முதலியவர் களாலும், முனிவர்களாலும், வியாழன் முதலிய தேவர்களாலும், தேவர்களுக்கும் மேலாகிய உருத்திரர், திருமால் முதலியவர் களாலும் தோற்றுவிக்கப்பட்டனவாக நூல்களினின்றும் அறி கின்றோம். சமயக்கருத்துக்கள் செவிவழியாகவும் – நூல்வழி யாகவும் நன்மக்களிடையே பரவிச் சமய ஒழுக்கங்கள் நிலை பெறுகின்றன. இவ்வுலகில் அளவிட முடியாத சமயங்க

ளுண்டு. இருப்பினும் வாதிப்பதற்குப் பொருத்தமான சிறந்த கருத்துக்களை எடுத்துக் கொண்டு, பிறசமயக் கொள்கைகளை ஒதுக்கித்தள்ளாமலும், பிறசமயப் பொருள்கள் முடிவான கருத்தல்ல என்பதையும், அதற்கும் மேலாகிய சிறந்த மெய்ப்பொருள்களை, மிகத்தெளிவாக விரித்துரைக்கின்றன சைவசாத்திர நூல்கள்.

சைவசமயம், அகச்சமயம் – புறச்சமயம் – அகப்புறச் சமயம் – புறப்புறச்சமயம், என்ற பொதுவகையிற் குறிக்கும் நால்வகைப் பிரிவினுள் எண்ணற்ற சமயங்களைப் படிமுறையாக வைத்து முடிந்த முடிபாகிய சித்தாந்தக் கருத்துக்களைக் கூறுகின்றது. நெல் முதலிய தானியங்களை முகத்தல் அளவைகளாலும், ஆடை, நிலம் முதலியவற்றை நீட்டல் அளவைகளாலும் – மற்றுமுள்ள பொருள்களை நிறுத்தல் அளவைகளாலும் அளந்து அறிகின்றோமல்லவா? இதைப் போலச் சமயக்கொள்கைகள் காட்சி முதலிய பிரமாணங்களால் ஆராயப்பட்டுள்ளன. பிரமாணம் என்றால் அளவை என்று பொருள். ஆராய்ச்சிக்குப் பொருந்துவதாகவுள்ள மிகச்சிறந்த கருத்துக்கள், காட்சி கருதல் உரை (ஆகமம்), என்ற மூன்று அளவைகளால் ஆராயப்பட்டு முடிவுற்ற பொருள்களே சித்தாந்தக் கருந்துக்களாகும். அறிவாலறியும் அளவைகள் பலவுண்டு. இருப்பினும் எல்லா விதப்பிரமாணங்களும், காட்சி, கருதல், ஆகமம், என்ற மூன்றினுள் அடங்கிவிடும். ஐம்பொறிகளால் பொருள்களை நேரில் கண்டுணர்வது காட்சி அல்லது காண்டல் என்று சொல்லப்படும். "புகையைக் கொண்டு நெருப்புளது" என்றறிவதுபோலக் குறிகளால் உய்த்துணர்வது கருதல் (அநுமானம்) என்று கூறப்படும். இவ்விரண்டு பிரமாணங்களாலும் ஆராய்ந்துணர்ந்த கருத்துக்களை உலகோர் உணர உரைப்பது "ஆகமம்" என்னும் பிரமாணமாகும். ஆகமம் – உரையளவை.

"ஆகமம்" என்ற சொல்லுக்கு வந்தது என்பது பொருள். சிவாகமம் என்றால் சிவபெருமானிடமிருந்து வந்தது என்று பொருள். சைவ சமயத்தின் தலைவர் சிவபெருமான். சிவபெருமான் அருளிச் செய்த நூல்கள் சிவாகமங்களாகும்.

"அடியா ருள்ளத்து அன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"

எனப்பாடுகிருர் திருவாசகம் அருளிய மணிவாசகர். ஆகமங்கள் பதி (கடவுள்) பசு (உயிர்) பாசம் (உடல்) ஆகிய முப்பொருள் களின் இலக்கணங்களைக் கூற வந்தன எனவும், அஞ்ஞானத் தில் முழ்கியுள்ள உயிர்கள் ஊழ்வினையின் பரிபாகத்திற்குத் தக்கபடி மெய்ஞ்ஞானமாகிற சிவஞானத்தைப் பெற்றுய்வதற்கு வந்தன எனவும் பெரியோர்கள் விரித்துக் கூறுவர். சிவாகமங் கள் சைவசமயப் பிரமாண நூல்களாகும். சிவபெருமானுல் தோற்றுவிக்கப்பட்ட ஆகமங்கள் இருபத்தெட்டாம்.

"அஞ்சன மேனியன் அரிவையோர் பாகத்தன்
அஞ்சோடு இருபத்து மூன்றுள ஆகமம்."
— *திருமந்திரம்.*

இவ்வாகமங்களின் பெயர்களாவன :—

1 காமியம் 2 யோகசம். 3 சிந்தியம். 4 காரணம். 5 அசி தம். 6 தீப்தம். 7 சூக்குமம். 8 சகசிரம். 9 அம்சுமான். 10 சுப்ர பேதம். 11 விசயம். 12 நிச்வாசம். 13 சுவாயம்புவம். 14 அனி லம். 15 வீரம். 16 ரௌரவம். 17 மகுடம். 18 விமலம். 19 சந் திரஞானம். 20 பிம்பம். 21 புரோத்கீதம். 22 லளிதம். 23 சித் தம். 24 சந்தானம். 25 சார்வோக்தம். 26 பாரமேசுவரம். 27 கிரணம். 28 வாதுளம்.

இவ்விருபத்தெட்டு ஆகமங்களும் மூலாகமம் என்று சொல் லப்படும். இவைகளைத் தழுவிய உபாகமங்கள் இருநூற்றேழு ஆகும். மூலாகமங்களுக்கு "சித்தாந்தம்" – "சைவம்," என்ற பெயர்களுமுண்டு. "சைவம் சிவ சம்பந்தமாவது" என்று விளக்கம் கூறியது தமிழாகமம். முடிந்த முடிபாகிய கருத்துக் களைக் கூறுவதால் சிவாகமங்கள் சித்தாந்தமாகும். சிவாகமங் களை, தந்திரகலை – மந்திரகலை – உபதேசகலை, என மூன்ருகப் பிரிக்கலாம். சைவசமயக் கொள்கைகளுக் கேற்ப முன்பின் மாறுபாடில்லாத அனுட்டானங்களைக் கூறுவது தந்திரகலை

என்னும் பகுதியாகும். மனம் முதலியவற்றையடக்கி இறைவனை வழிபடும் வாய்மை நெறியைக் கூறுவது மந்திரகலையாகும். உபதேசகலையில் ஆதி அந்தமற்ற இறைவன் தன்மையும் பசுபாச இலக்கணங்களும் கூறப்படுகின்றன.

"ஆரும் அனுதி கலையா கமவேதம்
ஆரும்அத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆரும் மனுதி யுடலல்லா மந்திரம்
ஆரும் சிவபோ தகர்உப தேசமே."

என்ற திருமந்திரப் பாடலும்,

அனுதியே அமலனுய அறிவனுல் ஆகமந்தான்
பின்ஆதிமாறு இன்றிப் பேணல் தந்திரமந்திரங்கள்
மனுதிகள் அடக்கித்தெய்வம் வழிபடும் வாய்மையாகும்
தனுதியிறிலாதான் தன்மை யுணர்த்துதல் உபதேசம்தான்.

என்ற சிவஞானசித்தியார்ச் செய்யுளும் இக்கருத்துக்களுக்கு ஆதாரமாகும்.

ஆகம அறிவின் பயன் இறைவனை வழிபடுதலே. இன்ப வடிவினரான சிவபெருமான் வழிபாட்டிற்தரிய சாதனங்கள், சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற நான்குமாம். சிவ வழி பாட்டிற்குத்தம் பரு உடலை உபயோகப்படுத்துதல் சரியை ஆகும். மெய், வாய், கண், காது, மூக்கு முதலிய ஞானேந்திரியமைந்தினையும் வழிபாட்டில் ஈடுபடுத்துதல் கிரியை எனப்படும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம், பிராணவாயு, இவற்றைச் செலுத்துதல் யோகம் என்பதாம். ஆத்மாவுக்கு இயல்பாயுள்ள அறிவை சிவபெருமான் திருவடிக்கே அர்ப்பணம் செய்தல் ஞானமாகும். இந்நால்வகை நெறியுள், சரியை-கிரியையிரண்டும் தந்திரகலையினுள்ளும், மந்திர கலையில் யோகநெறியும், உபதேசகலையினுள் ஞானநெறியும் அடங்குவனவாம். சரியை முதலிய நால்வகைநெறி நிற்போரை நல்வினை-தீவினைகளால் விளைகின்ற இன்பதுன்பங்கள் மனத்தைச்சாராது. அதனுல் மனக் கவலையொழிந்து தனக்குவமை இல்லாதானுகிய சிவபரஞ்சுடரின்

திருவடிக் கமலங்களைச் சேரலாம் என்பதைச் சிவாகமங்கள் நமக்குக் கூறுகின்றன. குயவன் மண்ணிலிருந்து குடம், பானை முதலிய பாண்டங்களைச் செய்து மக்கள் நலத்திற்குத் தருவது போல, பெருங்கருணைக்கடலாகிய இறைவன், அஞ்ஞானமாகிற மாயையை இடமாகக் கொண்ட உயிர்கள், தமக்கும் அறிவற்ற மாயைக்குமுள்ள வேறுபட்ட தன்மைகளையுணர்வதன் பொருட்டு அம்மாயையிலிருந்தே, தனு (உடல்) கரணம் (மனம்) முதலிய (அகக்கருவிகள்) புவனங்களை (உலகங்களை)ப்படைத்து உயிரையும் தனு, கரண, புவனங்களையும் கூட்டி வைக்கின்றார். உடல் முதலிய துணைக்கருவிகளைப் பெற்ற உயிர்தமறிவு இச்சைசெயல்களை வெளிப்படுத்தி, நல்வினை தீயவினைகளைச் செய்து அதன் பயனாகிய இன்பதுன்பங்களை அனுபவிக்கும். இருவினையின் ஏற்றத் தாழ்விற்குத் தக பல பிறவிகளைப் பெற்று முடிவில் புண்ணிய மிகுதியால் மானுடப் பிறவி பெற்று, கல்வி கேள்விகளாலும் அன்பின் மிகுதிப் பாட்டாலும் ஞானவழிநிற்கும். இவ்வாறு ஞானவாழ்வை மேற்கொண்ட நன்மக்கள் இறைவனடி சேர அவாமிகக்கொண்டு சரியை முதலிய நால்வகை ஞான நெறிச் செல்ல முற்படும்போதுதான் சிவாகமப் பொருள்களின் உறுதிப்பாடு தூய உள்ளத்தில் பசுமரத் தாணிபோல் பதியும். அப்போது சிவாகமங்கள் சிவஞானத்தைப் போதிக்க வந்த பெருநூல்கள் என்பது தெளிவாக விளங்கும்.

---

# "இறைநிலை எய்திய நிறைமனிதன்"

திரு. அ. முருகநாதன் அவர்கள்,
ஸ்ரீ ராமகிருஷ்ண இல்லம், பள்ளபாளையம்,

"அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்றார் ஔவைப் பிராட்டியார். பெறுதற்கரிய மேலாம் பிறவியைப் பெற்றுள்ள நாம், அப்பிறப்பிற் கேற்ற மேலாம் பெருவாழ்வு வாழக் கடமைப் பட்டுள்ளோம். ஆனால் நம்மில் பெரும்பாலோருடைய வாழ்வை உற்று நோக்குமிடத்து உருவத்தளவில் மானுடராகத் தோன்றுகின்றோமே யன்றி உள்ளப்பாங்கில் விலங்குகளாகவே காட்சியளிக்கின்றோம். ஒரு சிலவற்றில் விலங்கினும் இழிந்தவர்களாகவும் நடந்து கொள்ளுகின்றோம். விலங்குகள் அனைத்தும் தத்தமக்குரிய இயல்பைப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொருவகை விலங்கினமும் தம்தம் இயல்புக்கேற்பப் பிறந்து வாழ்ந்து மடிந்து போகின்றன. ஆனால் மனிதர் அவ்வாறு வாழ்கின்றாரில்லை. மனிதர் யாவரும் மனித இயல்பைப் பெற்று மனித வாழ்வு வாழ்கின்றார்களா? என்னும் வினா ஒன்று எழுமாயின், பெரும்பாலும் இல்லை என்னும் பதில் தான் எங்கணும் தோன்றும். விலங்கினத்தின் வாழ்வை உற்று நோக்கின் இவ்வுண்மை நன்கு புலனாகும். மக்களுக்கு மிகவும் பழக்கப்பட்டது பசு. மக்களது வாழ்வில் ஒன்றிப்போய் விட்டது பசுவினம். "கோமாதா" என்று இந்துக்களால் தொழப்படும் பெருமை வாய்ந்தது பசுவினம். பசுவின் இயல்பை மக்கள் அனைவரும் அறிவர். உலகில் உள்ள பசுக்கள் அனைத்தும் ஒரே இயல்பைப் பெற்றிருக்கின்றன. இதனை உலக மக்கள் அனைவரும் அறிவர். ஒரு பசுவாவது புலியின் இயல்பையோ, பூனையின் இயல்பையோ பெற்றிருக்கவில்லை. பசுக்கள் அனைத்தும் பசுத்தன்மையைப் பெற்றிருக்கின்றன. இவ்வாறே எல்லா உயிர்களும் (மனிதனைத்தவிர) தம் தம் இனத்துக்குரிய ஒரே இயல்புடன் பிறந்து அதற்கேற்ப வாழ்ந்து மடிந்து போகின்றன. உலகில் மனிதஇனம் மட்டுமே மனித இயல்பைப் பெற்று மனித வாழ்வு

வாழ்கின்றார்களில்லை. மானிட வர்க்கத்துள் பல்வேறு இயல்புகள் அமைந்து கிடக்கின்றன. புலியின் இயல்பு படைத்தோரும், பூனையின் இயல்பு படைத்தோரும், பசுவின் இயல்பு படைத்தோரும், பாம்பின் இயல்பு படைத்தோரும், நரியின் இயல்பு படைத்தோரும், நாயின் இயல்பு படைத்தோரும், மனித வர்க்கத்துள் உள்ளனர். இன்னும் மனித இயல்பு படைத்தோரும், மனித இயல்புக்கு அப்பாற்பட்ட மேலாம் தெய்வ இயல்பு படைத்தோரும் மனிதவர்க்கத்துள் உள்ளனர். மானுட இனத்துள் மட்டுமே பல்வேறு இயல்புகள் அமைந்து கிடக்கின்றன; இதனைப் பிற இனத்துள் காண்டல் அரிது; இது மானுட வர்க்கத்துள் மட்டுமே காணப்படும் தனியானதொரு அமைப்பு என்னலாம்.

மானுடன் ஒருவன் விரும்பினால் தனது இயல்பு முழுவதையும் மாற்றி அமைத்து விடலாம். ஆனால் விலங்கினம் அவ்வாறு செய்ய இயலாது. பசு புலியின் இயல்பையோ, புலி பசுவின் இயல்பையோ ஒருக்காலும் பெறஇயலாது. பசு பசுவாகவும், புலி புலியாகவுமே வாழ்ந்து மடிந்துபோக வேண்டியது தான். மனிதன் மட்டுமே தனது இயல்பு முழுவதையும் முற்றிலும் மாற்றியமைக்க வல்லவனாகின்றான். இது மானுடர்க்கே உரிய தனிச் சிறப்பாகும். மனிதன் தன்னை உயர்வற உயர்ந்த மேலாம் தெய்வநிலைக்கு உயர்த்திக் கொள்ளலாம்; அல்லது கீழ்மையிலேயே கிடந்துழலும் கீழ்மகனாகவும் இருந்து விடலாம். தன்னை மேலோனாக்குவதும் கீழோனாக்குவதும் தன்னையே பொறுத்திருக்கின்றது. பிறரால் நம்மை உயர்த்தவோ அல்லது தாழ்த்தவோ ஒருக்காலும் இயலாது. உலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தனது உள்ளத்தினின்றெழும் எண்ணத்திற்கேற்பவே வாழ்வு நடாத்துகின்றான். உள்ளத்தினின்றெழும் எண்ணங்கள் உயர்வுடையனவாயும், தூய்மை மிக்கனவாயும் இருப்பதற்கேற்ப, அவனது வாழ்வும்உயர்வும் தூய்மையும் மிக்கதாய் இருக்கின்றது. எண்ணங்கள் பரந்து விரிவடைய அடைய அவனது வாழ்வும் பரந்ததாயும், விரிந்ததாயும் காணப்படுகின்றது. ஆக ஒருவனது எண்ணத்திற்கும் நோக்கத்திற்கும் ஏற்ப அவனது வாழ்வு உயர்வுடையதாகவோ அல்லது தாழ்வுடையதாகவோ மாறியமைகின்றது.

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. (குறள்: 595)

என்னும் வள்ளுவப் பெருந்தகையின் பொய்யாமொழி வாழ்வைப் பற்றிய ஒரு பேருண்மையினைக் கலங்கரை விளக்கென விளக்கு கின்றது. சீரிய எண்ணங்களை எண்ணிச் சித்தத்தைத் தூய்மை யாக்கிக் கொண்டு தன்னை மேலாம் இறைநிலைக்கு உயர்த்திக் கொள்ளலே மானுட வாழ்வின் குறிக்கோள் என்னலாம். மனித வாழ்விற்கே எடுத்துக்காட்டாய், வழிகாட்டும் ஒளிவிளக்கு களாய்த் திகழ்ந்த பெருந்தகைகள் பலர் இவ்வையகத்தில் வாழ்ந்திருக்கின்றனர். முகில் கூட்டம் ஏதும் படியாத தூய வானம் போன்ற அன்னவரின் தூய்மையாம் வாழ்வை உற்று நோக்குமிடத்து இயற்கைக்கு அப்பாற்பட்டதாகவே காட்சி யளிக்கின்றது. அவ்வுத்தமரின் வாழ்வையே "நிறைவாழ்வு" என்றும், அப்பெருந்தகையோர்களையே "நிறைமனிதர்" என் றும் பகரலாம். இத்தகைய உத்தமரை உலகில் காணுதல் அரி தினும் அரிதாக இருக்கின்றது. இவர்களின் தொகை பெருகும் அளவிற்கு நாடும் உலகமும் நலம் மிகப் பெறுகின்றது. அன்ன வரை மனித உருத்தாங்கிய தெய்வம் என்றே கூறிவிடலாம். அன்னவரைப் போற்றும் அளவிற்கு அவர்களிடத்து அமைந் துள்ள தெய்விகத் தன்மை நம்மாட்டும் மிளிரக் காண்கின்றோம். நம்மவர் பெறுதற்குரிய மேலாம் பேறும் அதுவேயாகும். தன்னை "நிறைமனிதன்" ஆக்கிக் கொள்ளுதலே மானுட வாழ்வின் தலையாய தனிப்பெருங் குறிக்கோள் என்னலாம்.

மானுடன் ஒருவன் தனது ஆற்றலுக்கேற்ப முயன்று பல அரிய குணங்களைத் தனதாக்கிக் கொள்ளலாம். பரிபூரண நிலையை எய்திய ஞானியரிடத்து எல்லா அருங் குணங்களும் நிறைந்து ஒளிவிசின. அன்னவர் குணக்குன்றுகளாய் விளங்கி உலகிற்கு வழிகாட்டினர். குணங்களின் தொகை அனைத்தை யும் ஆற்றல், அன்பு, அறிவு ஆகிய மூன்றனுள் அடக்கி விடலாம். இந்த மூன்றினின்றே குணங்கள் அனைத்தும் வடி வெடுக்கின்றன. இம் முப்பெருங் குணங்களும் அமையப் பெற்றவனே முழுமனிதன் என்னலாம். மானுடர் ஒவ்வொரு வரும் இம் மூன்றையும் முறையாக வளர்த்துக் கொள்ளக்

கடமைப் பட்டுள்ளனர். ஆற்றல், அன்பு, அறிவு ஆகிய மூன்றும் ஒருங்கே வளர்தற் கேற்ற முறையில் கல்வி நிலையங்களையும், சூழ்நிலைகளையும் அமைத்துக் கொடுத்துச் சிறுவர்களுக்குக் கல்வி புகட்டுவது நலம் பயப்பதாகும். இத்தகைய கல்வி நிலையங்கள் பெருகும் அளவிற்கு எதிர்கால இளைஞர்கள் ஆற்றலும், தியாக உணர்வும் உடையவர்களாய் விளங்குவார்கள். நிறை நிலையை எய்திய பெரியார்கள் பலர் இவ்வையகத்தில் வாழ்ந்திருக்கின்றனர். நிறைநிலையை நம்மவரும் எய்துதற்குரிய வழிவகைகளையும் வகுத்துக் கொடுத்திருக்கின்றனர்.

"பெறுதற்கரிய மானுடப் பிறவியைப் பெற்றவன் இப் பிறவியிலேயே ஈசுவரனை அடைய முயலாது போனால் வீணில் பிறந்தவனேயாவான்" என்கிறார் ராமகிருட்டிண பரமஅம்சர். மானுட வாழ்வின் முடிவான குறிக்கோள் இறைவனை அடைதலே என்பதை அவரது கூற்று நன்கு விளக்குகின்றது. உடலும் உள்ளமும் உறுதியற்ற ஒருவனால் இறைவனது பெருமையை ஒருக்காலும் உணரவியலாது. இறைவனை அடையும் நெறியில் அச்சம் என்பதற்கே இடமில்லை. "நாமார்க்குங் குடியல்லோம்; நமனை அஞ்சோம்" என்ற அப்பர் வாக்கிற்கிணங்க அஞ்சாத நெஞ்சுடையாரே ஆண்டவனது திருவீட்டை அடைய இயலும். ஆதலால், வரம்பிலா ஆற்றலுடையனான இறைவனை அடைய நாம் ஒவ்வொருவரும் நமது உள்ளத்தே ஆற்றலை வளர்த்துக் கொள்ளக் கடமைப் பட்டுள்ளோம்.

எல்லாம் வல்ல இறைவனுக்கமைந்த பெயர்களும் வடிவங்களும் எண்ணற்றவை. "ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற் காயிரந் திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ" என்கிறார் மணிவாசகனார். உருவும் பெயரும் அற்ற அவருக்கு எண்ணற்ற உருவங்களையும், பெயர்களையும் சூட்டி வழிபடவும் அழைக்கவும் செய்கின்றோம். சச்சிதானந்தம் என்பது இறைவனுக்கமைந்த பெயர்களுள் ஒப்புயர்வற்றது. உண்மை அறிவு இன்ப வடிவினன் என்று அது பொருள்படுகின்றது. இறைவனைச் சித்சொரூபி; "அறிவு வடிவினன்" என்று சாத்திரங்கள் சாற்றுகின்றன. அவருக்கமைந்த திருப்பெயர்களுள் "வாலறிவன்" என்பதுவும் ஒன்றாகும்.

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா ரெனின்" (குறள் 2)

என்கின்றார் வள்ளுவப் பெருந்தகையார். இங்ஙனம் அறிவையே தனது திருவுருவாகக் கொண்டு ஞானப்பிழம்பாய் விளங்கும் இறைவனை அறிவற்றவர் அறிதல் என்பது அரிதே யாகும். "கல்லாதார் காட்சிக்கு அரியாய் போற்றி; கற்றார் இடும்பை களைவாய் போற்றி! என்கிறார் அப்பர் பெருமான். "கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவர்" என்று அருணகிரியார் உரைப்பதுவும் ஈண்டு நினைவுறற் பாலதாகும். ஆக, அறிவு வடிவினனான இறைவனது திருவருளைப் பெற விரும்புவார் அனைவரும் அவனை அறிதற்குரிய மெய்யறிவை வளர்த்துக் கொள்ளக் கடமைப்பட்டவராவர்.

இனி, "அன்பே சிவம்" என்கின்றன சைவத்திருமுறைகள். அன்பு வேறு சிவம் வேறல்ல.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே"

என்கிறார் திருமூலதேவர். இறைவன் அன்புவடிவினன்; அவன் அன்புருக் கொண்டு நம்மவர் உள்ளத்தினுள் ஊடுருவி நிற்கின்றான். அவன், அன்பருக்கன்பனாய் அனைவருள்ளும் கலந்து உறைகின்றான். அவனை அறிதற்கு, அறிந்து இன்புறுதற்கு அன்பொன்றே உற்ற உபாயமாகும். "பத்திவலையில் படுவோன் காண்க" என்பது திருவாசகம்.

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே!
அன்பெனும் குடில்புகும் அரசே!
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே!
அன்பெனும் கரத்தமர் அமுதே!
அன்பெனுங் கடத்துள் அடங்கிடுங் கடலே!
அன்பெனும் அணுவுளார் ஒளியே!
அன்பெனும் உயிருள் ஒளிர்தரும் அறிவே!
அன்புரு வாம்பர சிவமே! (திருஅருட்பா)

என்னும் அருட்பாவானது இறைவன் அன்பினில் கட்டுண்ணு வான் என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது. அகத்தே அன்பற்ற ஒருவன் பல தலங்களைத் தரிசித்தும், பல தீர்த்தங் களில் ஆடியும் ஆண்டவனது திருவருளுக்கு உரியனாதல் இயலாததாகும். இதனை,

“கோடி தீர்த்தம் கலந்து குளித்துஅவை
ஆடினாலும் அரனுக்குஅன் பில்லையேல்
ஓடும் நீரினை ஓட்டைக் குடத்துஅட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே.” (தேவாரம்)

என்னும் திருநாவுக்கரசரின் திருப்பாட்டே மெய்ப்பியாநிற்கும்.

ஆக, இறைவனது திருவருளைப் பெற்று அவனது திருவடியைப் பெற விரும்பும் நாம் ஆற்றல் அறிவு ஆகியவற்றோடு அன்பையும் வளர்த்துக் கொள்ளக் கடமைப் பட்டுள்ளோம். நாம் ஒவ்வொருவரும் நம்மிடத்து அன்பை வேண்டுமளவிற்கு வளர்த்துக் கொள்ளலாம். ஆனால் நாம் அவ்வாறு செய்கின்றோமில்லை. நம்மிடத்துள்ள சிறிது அன்பையும் நிலையற்ற உலகப் பொருள் களிடத்தும், உற்றார் உறவினரிடத்தும் செலுத்தி நம்மை நாமே துன்பத்தில் ஆழ்த்திக் கொள்ளுகின்றோம். அன்பிற்கு வேலி யமைத்து வளர வொட்டாமல் தடுத்துவிடுகின்றோம். நிலையில்லா உலகப் பொருள்களிடத்துச் செலுத்தும் அன்பை அவைகளினின்றும் மீட்டெடுத்து நிலைபேறுடைய இறைவனிடத்துச் செலுத்தும் அளவிற்கும் நமது உள்ளத்தில் அன்பு வளர்கின்றது. இவ்வன்பானது மேலும் மேலும் வளர்ந்து இறைவனிடத்தும், இறைவனால் படைக்கப்பட்ட உயிர்களிடத்தும் பாய்கிறது. அந்நிலையில் பக்தனொருவன் எவ்வுயிரையும் தன்னுயிர்போல் கருதும் உளப்பாங்கை எய்துகின்றான். அவன் காணும் பொருட்கள் அனைத்தினும் இறைவனையே காணுகின்றான். பிறவுயிர்களின் துன்பங்கண்டு துடிக்கின்றான்; பிறவுயிர்களின் துன்ப நீக்கத்தின் பொருட்டுத் தன்னுயிரையும் தத்தம் செய்யத் தயாராயிருக்கின்றான். எல்லாவுயிர்களும் அவனிலும், எல்லாவுயிர்களிலும் அவனும் ஒன்றித்து விடுகின்றான். அத்தகைய அருளாளன் தன்னுயிர் குறித்து அஞ்சுதற்கு யாதுளது?

"மன்னுயி ரோம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை" (குறள் 244)

என்கிறார் வள்ளுவப் பெருந்தகையார். பெறுதற்கரிய மானுடப் பிறவியைப் பெற்றுள்ள நாம் மானுடப் பிறப்பின் முடிவான குறிக்கோளாகிய இறைவனை அடைய ஆற்றல், அறிவு, அன்பு ஆகியவற்றை முறையாக வளர்த்துக் கொள்ளக்கடமைப்பட்டுள் ளோம். இம்முப்பெருங் குணங்களும் அமைந்தவரையே உலகம் போற்றுகிறது. நம்மவருள் ஆற்றலே வடிவெடுத்த ஒருவனை வீரன் என்று போற்றுகின்றோம். அறிவு மிகுந்த ஒரு வனை அறிஞன் என்று சிறப்பிக்கின்றோம். அன்பே உருவான ஒருவனைத் தொண்டன் என்று கொண்டாடுகின்றோம். ஆனால், ஆற்றல், அறிவு, அன்பு ஆகிய மூன்றும் ஒருங்கே நிறைந்த ஒருவரை வீரரென்றோ; அறிஞரென்றோ; தொண்டரென்றோ உலகோர் போற்றுவதில்லை; "தெய்வம்" என்று அவர் திருவடி களில் தெண்டனிட்டுத் தொழுவதைக் காண்கின்றோம். புத்தர் நால்வர், விவேகானந்தர் போன்ற பெருமக்களை உலகோர் போற்றுவதோடு தெய்விக மனிதரென்று அவர் திரு வுருவங்களைத் தொழுவதையுங் காணுகின்றோம். அத்தகைய பெருமக்களையே "இறைநிலை எய்திய நிறைமனிதர்" என்று பகரலாம். எனவே சுவாமி விவேகானந்தர் கூறுவதுபோல, "முதலில் நாம் தெய்வங்களாவோமாக; அதன்பின், பிறரும் தெய்வங்களாகுமாறு துணைபுரிவோமாக. "ஆகுக, ஆக்குக" இதுவே நமது வாழ்வின் குறிக்கோள் ஆகுக.

எழுமின்! விழிமின்!! குறிசாரும்வரை நில்லாது செல்மின்!!!

— சுவாமி விவேகானந்தர்



உ

சிவ சிவ

திருப்பெருந்துறையில்

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள்

## அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5000/-



'நமச்சிவாயவாழ்க' என்ற தொடக்க முடையதும், 'சிவனது அனாதி முறைமையான பழமை' விளக்குவதுமான சிவபுராணத்தை மன்பதைகள் உய்யும்வண்ணம் பாடியருளிய மாணிக்கவாசக சுவாமிகளுக்குச் செழுமலர்க்குருந்த மேவிய சிவபெருமான் 'செந்தழல் புரைதிருமேனியும் காட்டித் திருப் பெருந்துறையுறை கோயிலுங் காட்டி அந்தணனாவதும், காட்டி வந்து' ஆட்கொண்டருளிய தலமாக விளங்குவதும், இறைவன் மறைந்தருளிய பிறகு அன்பரொடுமருவிக் குருந்தின் அடியில் தெய்வப்பீடிகை அமைத்துக் குருநாதருடைய திருவடித்தாமரைகளை எழுந்தருளப்பண்ணி மாணிக்கவாசகர் வணங்கி வழிபட்ட தலமாகியதும்,

நமச்சிவாய வாழ்க என்று தொடங்கும் சிவபுராணமும், பக்திவைராக்கிய விசித்திரத்தை விளக்கும் திருச்சதகமும், 'போற்றியென் வாழ்முதலாகிய பொருளே' என்று தொடங்கும் திருப்பள்ளியெழுச்சியும், செத்திலாப்பத்து, அடைக்கலப்பத்து, ஆசைப்பத்து, புணர்ச்சிப்பத்து, வாழாப்பத்து, அருட்பத்து, பிரார்த்தனைப் பத்து, குழைத்தபத்து, உயிருண்ணிப்பத்து, திருப் பாண்டிப்பதிகம், திருவேசறவு, அற்புதப்பத்து, சென்னிப்பத்து, திருவார்த்தை, திருவெண்பா, பண்டாயநான்மறை ஆகிய திருவாசகங்கள் அருளப்பெற்றதும், ஆவுடையார் கோயில் என்று வழங்கப் பெறுவதுமான திருப்பெருந்துறை என்னும் திருத்தலத் தில், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப்பேறெய்திய திருநாள் ஆகிய வைகாசி அமரபக்ஷம் திருதியையில், அந்தணர் அருந் தவர் ஏழைகளுக்கு அன்னம் பாலித்தற் பொருட்டுத் திருப்பனந் தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்

தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத்தருமம் நிறுவப்பெற்றது. இது 'திருப்பெருந்துறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 5000/- (ரூபா ஐயாயிரம்). இது ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப் பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 – ஸ்டாக் சர்டிபிகேட் நெ. எம்எஸ். 3444 – ரூ. 2000/-, கடன் பத்திரம் நெ. சிஏ. 240212 – ரூ. 1000/-, சிஏ. 240213 - ரூ. 1000/-, சிஏ. 240214 - ரூ. 1000/- ஆக ரூ. 5000/-. இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப் பெற்றுவரும்.

3. இம்முதற் பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகையில் இத்தருமத்தைப் பரிபாலிப்பதற்குரிய செலவு போக எஞ்சிய தொகை முழுவதும், திருப்பெருந்துறை எனப்பெறும் ஆவுடையார் கோயிலில், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியைநாளில், ஆண்டு தோறும், அந்தணர் அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம் பாலித்தற் பொருட்டுப் பயன்படுத்தப்பெறும்.

4. ஆண்டு தோறும் கிடைக்கும் வட்டி வருமானத்துக்கு ஏற்பவும் கால விலைக்கு ஏற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம் பாலிப்பு நடத்தப் பெற்று வரும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப் பெறமாட்டாது. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் அரசினரால் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் திரும்பவும் முதலீடு செய்யப்பெறும்.

திருப்பனந்தாள், 8–2–1963. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

4வது புத்தகம் 50வது வால்ம் 139–141 வது பக்கங்களில் 1963ம் ஆண்டு 10 நம்பராக 11–2–63உ யில் திருவிடைமருதூர் சப் ரிஜிஸ்தர் ஆபிஸில் ரிஜிஸ்தர் செய்திருக்கிறது.

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9690 to 99 | ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை (கருத்துரையுடன்) இலவச வெளியீடு. | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் |
| 9700 to 9709 | திருவெம்பாவை-திருப்பள்ளி யெழுச்சி (குறிப்புரையுடன்). | ஷ |
| 9710 & 11 | வடதிருமுல்லை வாயில் திருப்பதிகம். | தருமபுர ஆதீனம் |
| 9712 to 15 | விநாயக கவசம் (சிவகவசம், சக்திக்கவசம், சரசுவதி தோத்ரம், இலக்குமி தோத்ரம், மக்கட் செல்வமாலை, மழைமாலை ஆகியன அடங்கியவை) செல்வத்திறவுகோல் மூலமும், உரையும். | ஆசிரியர் க. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் கிடைக்குமிடம்: தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி |
| 9716 to 19 | Studies in Saiva Siddhanta Part I. | தருமபுர ஆதீனம் |
| 9720 | திருநாவுக்கரசு நாயனுர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் (5ந் திருமுறை). | ஷ |
| 9721 | குமரகுருபரன் 1962 vol XIII. | |
| 9722 to 24 | திருமந்திரம் ஐந்தாம்தந்திரம், பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன். | திருவாவடுதுறை ஆதீனம் |

| | | |
|---|---|---|
| 9725 to 27 | திருமந்திரம் மூன்றும் தந்திரம் (முதற்பகுதி). | திருவாவடுதுறை ஆதீனம் |
| 9728 to 33 | சிவஞான போதச் சிற்றுரைத்தெளிவு (பிரமாண இயல்). | ஷ |
| 9734 to 43 | பன்னிருதிருமுறை வரலாறு முதற்பகுதி (முதல் ஏழுதிருமுறைகள்). | வித்துவான் க. வெள்ளைவாரணன், விரிவுரையாளர் தமிழாராய்ச்சித்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம். |
| 9744 | திருஈங்கோய்மலையெழுபது உரை விளக்கம். | வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், M.A., B. O. L., தமிழ்த்துறைத் தலைவர், புதுக் கல்லூரி, சென்னை. |
| 9745 | நல்லுறவுப் பாலங்கள் (அமெரிக்க நாகரீக நூல் வரிசை எண் 5). | By ஜான். டீ. ரீட். |
| 9746 | கந்தபுராணம் முதற்பகுதி. | |
| 9747 | ,, இரண்டாம் பகுதி. | |
| 9748 | ,, மூன்றும் பகுதி. | |
| 9749 | The Journal of Tanjore Saraswathi Mahal Library vol. XVI. | S. Gopalan, B. A., B. L., Hon. Secretary, T. M. S. S. Library, Tanjore. |
| 9750 | தருமை கனகாபிஷேக விழாமலர் 1961. | தருமையாதீனம் |

(தொடரும்)

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | ரூ ந பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, ... | 1 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) (அச்சில்) | |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 18 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, ... | 2 75 |
| 19 | ,, யுத்த தேவகாண்டம் ,, ... | 2 00 |
| 20 | ,, தக்ஷகாண்டம் ,, ... | 1 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 22 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 10 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் ... | 0 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 29 | திருக்குறள் – பொருட்பால் ,, ... | 2 50 |
| 30 | திருக்குறள் – காமத்துப்பால் ,, ... | 1 00 |
| | ௸ 28. 29. 30 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் ... | 0 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.



| | | | |
|---|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 41 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங் களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 48 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 49 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... | 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 51 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |
| 52 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... | 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... | 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... | 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"பேரானந்த விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறிப்பிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) நீங்கலாக எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '63.